# கல்கி

ஸ்பீடா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 04.07.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்









# கல்கி

04.07.2010



# ராவணன்

✱ "எனக்கு மணிரத்னத்தைப் பார்த்தா பயமா இருக்கு. மனுஷன் மேக்கிங்ல மிரட்டுறார்" - தாம் உச்சத்தில் இருந்தபோது இயக்குநர் பாரதிராஜா உதிர்த்த பாராட்டு இது. ராவணன் படம் பார்த்த பிறகு இப்படி நம்மால் பாராட்ட முடியுமா?

✱ எல்லோர்க்கும் தெரிந்த ராமாயணக் கதையோடு தற்கால கடத்தல்காரர்கள் கதையையும் பிணைத்து இழைத்திருக்கிறார் மணிரத்னம். கண்களுக்குள் குளிர்ச்சியைக் கடத்தும் கேமராதான் ராவணனின் நிஜ ஹீரோ. சந்தோஷ் சிவனும், மணிகண்டனும் அபாரம். ஐஸ்ஸோடு சேர்ந்து அதிரப்பள்ளி அருவியும் நடிக்கிறதோ?

✱ முறுக்கேறிய உடம்பும், செருக்கேறிய பார்வையுமாக விக்ரம், தாம் நடிக்கத் தெரிந்தவர் என்பதை அடிக்கோடிட்டு காட்டியிருக்கிறார். அவரைத் தேடி ஐஸ் மீண்டும் வரும்போது விக்ரம் வெளிப்படுத்தும் நடிப்பு க்ளாஸ். அழகும் நடிப்பும் ஐஸுக்கு அமர்க்களம். பார்வையாலேயே விக்ரமிடம் நேசத்தை விதைப்பது உயிர்ப்பான நடிப்பு. போலீஸ் அதிகாரி பிருத்விராஜ், விக்ரமின் அண்ணனாக நடிக்கும் பிரபு, காட்டிலாகா அதிகாரி கார்த்திக் அவரவர் பாத்திரத்தில் அதிகமாகவே நடித்திருக்கிறார்கள்.

✱ ரகுமானின் இசை ரம்யம். பின்னணியில் ஸ்ருதி பிசகுதோ? வசனம் சுஹாசினியாம். ஒவ்வொரு வார்த்தைக்கும் 'லே'வைச் சேர்த்து விட்டா நெல்லைத் தமிழ் ஆயிடுமா என்ன? சில வசனங்கள் புரியவே இல்லை. காட்டிலாகா அதிகாரி முதல், காதல் வயப்பட்டவர்கள் வரை எல்லாரும் ஹை டெசிபலில் கத்துகிறார்கள்.

✱ தமிழ்ப் பழங்குடியினர் திருமண பின்னணியில் ஏங்க வடநாட்டு ஊர்களை ஞாபகப்படுத்துற செட். அம்பாசமுத்திரத்தை அம்பாசமுத்திரமா காண்பிக்க வேண்டாமா? மண் வாசனையில் மசாலா கலந்தால் எடுபடுமா? குறுக்கும் நெடுக்குமாக ஓடுது திரைக்கதை.

✱ விக்ரம் சுடப்பட்டதும் ஐஸ்ஸின் துடிப்பில் நம் மனசும் கசிவதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

**ராவணன் - ரசிக்கலாம்.**

**- கதிர்பாரதி**





# கல்கி


பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
பொறுப்பாசிரியர் :
ஆர்.வெங்கடேஷ்
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்



தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899
ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com
இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com





சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-



கல்கி பில்டிங்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

● ரேவதிப்ரியன், ஈரோடு

? மருத்துவத்தைத் தொடர்ந்து, இப்போது ரயில்வே துறையின் தேர்வு களிலும் முறைகேடுகள் செய்து லட்சக் கணக்கில் சம்பாதித்து விட்டார்களே?

! இரண்டு துறைகளிலும் தகுதியற்ற வர்கள் நுழையும்போது பாதிக்கப்படப் போகிறவர்கள் பொது மக்கள்தாம். சிக்குன் குன்யா, பன்றிக் காய்ச்சல், எய்ட்ஸ் ஆகிய வற்றை விடக் கொடிய வியாதி லஞ்ச ஊழல்; அது மேலிருந்து கீழாகப் பரவும் தொற்றுநோய் என்பதைத் தலைவர்கள் புரிந்து செயல் படும்போதுதான் விமோசனம்.

● வே.ராஜகோபாலன்,
சென்னை-33 ★

? தமிழ் மொழிப் பற்றுள்ளவர்கள் 'கேக்' வெட்டிப் பிறந்த நாள் கொண் டாடலாமா?

! ஓ யெஸ்...! கேக்குக்கு ஒரு மாற்றுத் தமிழ்ச் சொல் உருவாக்கும் வரை கேக் கையே வெட்ட வேண்டியதுதான்! இட்லி வெட்டினாலும், பண்டம்தான் தமிழ்நாட் டைச் சேர்ந்ததாக இருக்குமே தவிர, வழக் கம் அந்நியம்தான்!

● எஸ்.சாந்தா, பொள்ளாச்சி

? இருபது லட்சம் ரூபாய் மதிப்பி லான மதுபானங்களைக் கூடுதலாக இருப்பு வைக்க (கோவை செம் மொழி மாநாட்டையொட்டி) டாஸ் மாக் ஊழியர்களுக்கு உத்தரவிடப் பட்டுள்ளதாமே..?

! ''தமிழ் போதை தலைக் கேறி விட்டது'' என்று எதிர்க் கட்சி கூறாமலிருக்க, மது போதை ஏற்ற அரசு முற்பட் டிருக்கிறது போலும்! ''கூடுதல் மது விற்

* அரைகுறை கொள்கை!



# நயன்தாராவின் பாலிஸியைப் பாராட்டலாமா?

பனை வருவாய், மாநாட்டின் செலவை ஓரளவேனும் ஈடுகட்டும்'' என்றும் அரசுத் தரப்பில் விளக்கம் தரப்படலாம்!

● **நீ.அசோகன், சென்னை-19**

*? தமிழ்நாட்டில் அ.தி.மு.க. கரைவதற்கு இ.காங்கிரஸ் எழுச்சியே காரணம் என்கிறாரே ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்?*

! உருகிக் கரைவதெல்லாம் காங்கிரஸுக்கு வந்து சேரவில்லையே; தி.மு.க.வில் அல்லவா போய் ஒட்டிக் கொள்கிறது! ஆக, தி.மு.க. பலம் பெறுவதற்கு தமிழகக் காங்கிரஸின் அடிமைத்தனமே காரணம் என்றும் கூறலாம்!



* அழைக்கும் அபாயம்!



* அறியாத அடிமைத்தனம்!

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை.** ❑

*? ''நான் பயன்படுத்தாத ஒரு பொருளை மற்றவர்களைப் பயன்படுத்தச் சொல்லிப் பரிந்துரைப்பது தவறு என்பது என் கருத்து. அதனால் எந்த விளம்பரப் படத்திலும் நடிப்பதில்லை என்பதைக் கொள்கையாகவே வைத்திருக்கிறேன்'' - நயன்தாராவின் இந்தப் பாலிஸியைப் பாராட்டலாம்தானே?*

! மிகச் சரியான பாலிஸி. நயமான முடிவு. இதே தார்மிக நெறிகளுடன் திரைப்படக் கதாபாத்திரங்களையும் ஏற்பாரேயானால் இன்னும் பாராட்டலாம்!

● **எஸ்.ராமசாமி,**
**வடக்குதயிர்பாளையம்**

*? பீஹாரில் வெளியாகும் பத்திரிகைகளில் குஜராத் அரசு விளம்பரம் செய்தது சர்ச்சைக்குள்ளாகி இருக்கிறதே? ஒரு மாநில அரசு வேறு மாநிலப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்வதில் பயன் என்ன?*

! மாநிலத் தேர்தல் நெருங்கி வருவதால், பீஹார் வெள்ளத்தின்போது மோடியின் குஜராத் அரசு நிதிஉதவி செய்ததை விளம்பரப்படுத்தி, பா.ஜ.க. அரசியல் ஆதாயம் பெற நினைக்கிறது. விளம்பரத்தில் தமது படம் பயன்படுத்தப்பட்டதை நிதீஷ் குமார் ஆட்சேபிப்பது முற்றிலும் சரி. ஆனால், அதை ஆபத்து நிலைகளுக்குக் கொண்டு செல்வது அவருக்கு அனுகூலமாகாது. பி.ஜே.பி. ஆதரவுடன் அவர் கூட்டணி ஆட்சிதானே நடத்துகிறார்.

● **எஸ்.புவனா,**
**வேலாயுதம்பாளையம்**

*? இலங்கையில் மறுசீரமைப்பு என்ற வகையில் ராஜபக்ஷ அரசு பெருமளவில் சீனர்களைக் குவித்திருப்பது தமிழர்களுக்கு மட்டுமல்ல; இந்தியாவுக்கே ஆபத்து என்று ஜெயலலிதா எச்சரித்திருக்கிறாரே?*

! இந்தியாவுக்கு ஏற்கெனவே வடக்கே சீனர்களால் ஆபத்து! எதிர்காலத்தில் தெற்கேயிருந்தும் அந்த ஆபத்து தோன்றக்கூடும்! இலங்கைக்கோ இப்போது ஆபத்து! ராஜபக்ஷ ஏமாந்து போகாமல் இருந்தால் ராஜா; ஏமாந்தால் கூஜா!

● **மங்கையர்க்கரசி, சென்னை-78**

*? இருபத்தாறு வருடங்களாக போபால் மக்களுக்கு உரிய நிவாரணம் கிடைக்காததை மறந்து விட்டு, ஆண்டர்சனைத் தப்பவிட்டது பற்றியே பா.ஜ.க. பேசுவது முறையா?*

# நீங்கள் கேட்டவை - தராசு

! பா.ஜ.க. ஆட்சியில் இருந்தபோதும் நிவாரணம் கிடைக்கவில்லை என்பதால் அதை அடக்கி வாசித்து, காங்கிரஸ் ஆட்சியில் ஆண்டர்சன் தப்ப அனுமதிக்கப்பட்டதை ஒலி பெருக்குகிறார்கள்! எல்லாமே அரசியல்தான் தாயே!

● எம்.ராஜேந்திரன், வால்குடி.

*? பிடுதி ஆசிரமத்தில் அக்னி வளையத்துக்குள் நித்யானந்தா தியானம் செய்யத் தொடங்கியுள்ளாரே?*

! காவல் துறையின் கையாலாகாத்தனத்தால் குற்றச்சாட்டிலிருந்து தப்ப முடியும். ஆனால் சூழ்ந்துள்ள அவப்பெயர் வளையத்தை அக்னி வளையத்தால் பொசுக்கிவிட முடியாது.

● மதுரை முருகேசன், தஞ்சாவூர்

*? இளைஞர் காங்கிரஸில் புதியதாகச் சேர்ந்திருக்கும் பன்னிரண்டு லட்சம் இளைஞர்களும் போர்வாளாக மாற வேண்டும் என்ற ப.சிதம்பரத்தின் பேராவல் நிறைவேறுமா...?*

! இளைஞர்கள் எங்கள் கரங்களில் வாள்களாகவே இருக்கவேண்டும்; பதவியில் முதியவர்களான நாங்களே அமர வேண்டும் என்பது சிதம்பரத்தின் ஆவலாக இருந்தால், மத்தியில் அது ஒரு வேளை நிறைவேறலாம். மாநிலத்தில் ஆட்சி அதிகாரம் கேட்காமல் ஆறாவது விரல் போல் இருந்தால், போர்வாளாக ஒருபோதும் மாறமுடியாது; வெறும் வாலாகத்தான் விளங்க முடியும்.



● பொசுக்காத நெருப்பு!



● வாளா? வாலா?



● பணமும் மனமும்

| |
|---|
| ❑ ரூ.150 பரிசு பெறுபவர்: என்.பாலகிருஷ்ணன், மதுரை |
| ● ரூ.75 பரிசு பெறுபவர்: வே.ராஜகோபாலன், சென்னை-33 |

● நாமல் கண்ணன், பெங்களூரு-38

*? கர்நாடகாவின் மாண்ட்யா மாவட்ட கிராமம் ஒன்றில், புதைத்த குஷ்டரோகி பிணத்தை எடுத்து எரித்தால் மழை வரும் என்ற நம்பிக்கையுடன் மக்கள் செயல்பட்டிருக்கிறார்களே... இந்த நூற்றாண்டிலுமா இப்படி...?*

! சட்டபூர்வமாக எல்லோருக்கும் கல்வி பெறும் உரிமையை வழங்கிவிட்டால் மக்கள் அனைவரும் புத்திசாலிகளாகி விடுவார்கள் என்ற மூடநம்பிக்கை தலைவர்களிடம் இருக்கும்போது, மக்களிடையே நீங்கள் குறிப்பிடுவது போன்ற மூடநம்பிக்கைகள் தொடர்வதில் ஆச்சர்யமேயில்லை.

● எஸ்.சாந்தி, காட்பாடி

*? "ஐம்பது லட்சம் ரூபாயைத் தாண்டிட்டா அப்புறம் பணம் என்பது வெறும் கலர் பேப்பர்தான்" என்கிறாரே நடிகர் விக்ரம்?*

! போதும் என்ற மனம் உள்ளவர்களுக்கு ஐம்பது லட்சம் எதற்கு, பத்து ரூபாய் நோட்டு கூட கலர் பேப்பர்தான். ஆனால், அத்தகைய மனம் படைத்தவர்கள் அரிதாகையால் லஞ்ச-ஊழல் கொழிக்கிறது; கறுப்புப் பணம் செழிக்கிறது; விலைவாசி உச்சாணிக்கு உயர்கிறது! போதும் என்ற மனம் இருந்தும் பத்தாயிரம் ரூபாய் கூடப் போதமாட்டேனென்கிறது! ●

### டவுனாகும் கம்ப்யூட்டர் ஸ்டடீஸ்!



# ECE தான் டாப்பா.

"கம்ப்யூட்டர் சயின்ஸ் படிச்சா இப்போ மதிப்பில்லையாமே? அதை விட இன்ஃபர்மேஷன் டெக்னாலஜியில சேர்க்கிறது பெட்டர்! ரெண்டுமே வேணாம்; ஈ.சி.ஈ. (அதாங்க எலக்ட்ரானிக்ஸ் அண்டு கம்யூனிகேஷன் என்ஜினியரிங்) தான் பெஸ்ட்! பயோ டெக்னாலஜிக்கு நல்ல ஃப்யூச்சர் இருக்கு! என்ன பிராஞ்ச் படிக்கிறோம் என்பதை விட, எப்படிப் படிக்கிறோம் கிறதுதான் முக்கியம்; நல்லா படிச்சா சாஃப்ட்வேர் கம்பெனிகள்ல சரியா கேம்பஸ் ரெக்ரூட்மென்ட்ல வேலை கிடைச்சிடும்."

இப்படி ஆளாளுக்கு ஆலோசனைகளை அள்ளிவிட மகனையோ, மகளையோ என்ஜினியர் ஆக்கிப் பார்த்து மகிழ நினைக்கும் பெற்றோர்களுக்கும், பிள்ளைகளுக்கும் நல்ல கல்லூரியில் இடம் கிடைக்கணுமே! பிடிச்ச கோர்ஸ் கிடைக்கணுமே என்கிற டென்ஷன்! கவுன்சிலிங் நல்லபடியாய் முடிந்து, கையில் அட்மிஷன் கடிதம் கிடைக்கிறவரை இந்த டென்ஷன் இருக்கவே செய்யும்.

> **பி.ஈ., பி.டெக். படிப்புகளில் முதலிடத்தில் இருக்கும் கோர்ஸ் E.C.E. தான்!**

2008-ஆம் ஆண்டில் தமிழ் நாட்டில் இருக்கும் மொத்தம் நானூற்று ஐம்பத்தி நான்கு பொறியியல் கல்லூரிகளில் சேருவதற்காக சுமார் ஒரு லட்சத்து இருபத்தெட்டாயிரம் மாணவ,

# ...மத்ததெல்லாம் டூப்பா?

மாணவிகள் விண்ணப்பித்தார்கள். கடந்த ஆண்டு இது ஒரு லட்சத்து முப்பத்திரண்டு ஆயிரமாக அதிகரித்தது. இந்த ஆண்டு பொறியியல் படிப்புக்கு கிராக்கி இன்னும் அதிகமாகிவிட்டது. அண்ணா பல்கலைக் கழகத்தில் மொத்தம் ஒரு லட்சத்து நாற்பத்தி நான்கு ஆயிரம் விண்ணப்பங்கள் குவிந்துள்ளன. விண்ணப்பித்துவிட்டு, கவுன்சிலிங்கை எதிர்நோக்கிக் காத்திருப்பவர்கள் ஒரு பக்கம் என்றால், இன்னொரு பக்கம், "நல்ல காலேஜ்ல, நல்ல கோர்ஸ் கிடைக்கிற அளவுக்கு என் பிள்ளை மார்க் வாங்குவான்னு உத்தரவாதமில்லை; அதனால ஒரு லட்சம் ரூபாய் அட்வான்ஸ் கொடுத்து சீட்டை ரிசர்வ் பண்ணி விட்டேன்" என்று கூலாகச் சொல்லும் பெற்றோர்கள் இன்னொருபுறம்.

இவர்களின் பதற்றத்தைக் குறைக்கும்படியான தகவல் ஒன்றைச் சொல்கிறார் சேலத்தைச் சேர்ந்த கல்வி ஆலோசகரான ஜெய பிரகாஷ் காந்தி. "இந்த ஆண்டு பிளஸ் 2 முடிவுகளை அலசி ஆராய்ந்தால், சயின்ஸ் பிரிவு மாணவர்களில் கணிதத்தில் நூற்றுக்கு நூறு மார்க் வாங்கியவர்களின் எண்ணிக்கை 1756. சென்ற ஆண்டு கணிதத்தில் நூற்றுக்கு நூறு வாங்கியவர்கள் 4032 பேர். அதற்கு முந்தைய ஆண்டு 3882 பேர். அதேபோல கணிதத்தில் 200க்கு 195 அல்லது அதற்கு மேல் வாங்கியவர்கள் 9903 பேர். முந்தைய ஆண்டில் இது பத்தாயிரத்து நூற்று எண்பத்தி நான்காக இருந்தது. இந்த வருடத்தில் கணக்கு மார்க்கில் ஏற்பட்டுள்ள தொய்வு, இந்த வருடத்து என்ஜினியரிங் அட்மிஷனில் பெரியதொரு தாக்கத்தை ஏற்படுத்தும்" என்கிறார் இவர்.



● மோனிஷா



● காந்தி



● மதியழகன்

**இதனால் மாணவர்களுக்கு என்ன லாபம்?**

"சென்ற ஆண்டைவிட இந்த வருடம் சிறந்த கல்லூரிகளில் பல்வேறு கோர்ஸ்களுக்குமான கட் ஆஃப் மார்க் குறையும். அதாவது, ஒரு நல்ல கல்லூரியில், ஒரு குறிப்பிட்ட கோர்ஸில் சேர கடந்த ஆண்டின் கட் ஆஃப் மார்க்கைவிட அரை மார்க் அல்லது ஒரு மார்க் வரை குறைத்து வாங்கியவர்களுக்கும் கூட, இந்த வருடம் அந்தக் கல்லூரியில் அதே கோர்ஸ் கிடைக்க வாய்ப்பு உண்டு" என்று விளக்குகிறார் காந்தி.

"இப்போது ஈ.சி.ஈ. படிப்புக்குத்தான் ஏக கிராக்கியாமே? கம்ப்யூட்டர் சயின்ஸ், ஐ.டி. ஆகியவற்றுக்கு மவுசு குறைந்துவிட்டதாமே?" என்ற கேள்வியை பிரபல சாஃப்ட்வேர் நிறுவனத்தின் மனித வளத் துறையில் உயர் பொறுப்பில் இருக்கும் ஸ்ரீராமிடம் கேட்டபோது, "ஆமாம்! அதுதான் இன்றைய நிலவரம்! சில ஆண்டுகளுக்கு முன் சாஃப்ட்வேர் துறை இறக்கத்தைச் சந்தித்ததால் ஏற்பட்ட பெரும் பாதிப்புதான்

அதற்குக் காரணம். இன்னமும் கூட அமெரிக்கா போன்ற நாடுகளின் பொருளாதாரம் வீழ்ச்சியிலிருந்து முழுமையாக எழ முடியவில்லை என்றாலும், இந்தியா சுதாரித்துக் கொண்டுவிட்டது. சாஃப்ட்வேர் துறை வேகமாக முன்னேற்றம் கண்டு வருகிறது. ஆனாலும் மாணவர்கள் மத்தியில் கம்ப்யூட்டர் சயின்ஸ் மற்றும் இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி படிப்பதைவிட ஈ.சி.ஈ. படித்தால் எலெக்ட்ரானிக்ஸ் துறையிலும், சாஃப்ட்வேர் துறையிலும் வேலைக்குப் போக முடியும் என்ற எண்ணம் வலுப்பெற்று இருக்கிறது. இதன் காரணமாக பி.ஈ. மற்றும் பி.டெக் படிப்பில் முதல் நிலையில் ஈ.சி.ஈ. இருக்கிறது. அடுத்த இடங்களில் கம்ப்யூட்டர் சயின்ஸ், ஐ.டி., ட்ரிபிள் ஈ என்கிற எலெக்ட்ரிகல் அண்டு எலெக்ட்ரானிக்ஸ் என்ஜினியரிங் போன்ற படிப்புகள் இருக்கின்றன. ஆனால் சாஃப்ட்வேர் துறையைப் பொறுத்தவரையில் எல்லா பிரிவினருக்குமே வேலைவாய்ப்புகள் உள்ளன'' என்கிறார்.

''**எ**னக்கு பிசிக்ஸ் மிகவும் பிடிச்ச சப்ஜெக்ட். அதனால என் முதல் சாய்ஸ் ஈ.சி.ஈ. அடுத்தது கம்ப்யூட்டர் சயின்ஸ். பொதுவாகவே மாணவிகளில் மெஜாரிடியானவர்கள் மெகானிக்கல், சிவில், புரொடக்‌ஷன் என்ஜினியரிங், எலெக்ட்ரிகல் போன்ற 'கோர்' என்ஜினியரிங் கோர்ஸ்களை விட ஈ.சி.ஈ. காம்ஸ்கி (கம்ப். சயின்ஸின் சுருக்கம்)ஐ.டி. பயோடெக் போன்றவற்றையே விரும்புகிறார்கள்'' என்கிறார் மாணவி மோனிஷா.

**மோ**னிஷாவின் அப்பா மதியழகன், ''ஒரு பக்கம் பல கல்லூரிகளில் அடிப்படை வசதிகள் போதுமான அளவுக்கு இல்லை; இன்னொரு பக்கம் பத்திரிகைகளிலும், டி.வி. சேனல்களிலும் தங்களுடைய கல்லூரி நாட்டின் மிகச் சிறந்த கல்லூரிகளில் ஒன்று என்பதைப் போல விளம்பரம் செய்கிறார்கள்! ஆகவே, நமக்கு என்ன கோர்ஸ் தேவை என்பதைக் கூடச் சுலபமாகத் தேர்ந்தெடுத்து விடலாம்; ஆனால் எந்த காலேஜ் என்று முடிவு செய்வது மிகப் பெரிய சவால்



**அ**ண்ணா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் டாக்டர் பி.மன்னர் ஜவஹரின் ஆலோசனை என்ன?

சாஃப்ட்வேர் மற்றும் ஐ.டி. துறைகளில் வேலைக்குப் போனால் நிறைய சம்பளம் என்ற நிலையில், எல்லோரும் அங்கே போனார்கள். ஆனால் நான்கு ஆண்டுகளுக்கு முன்னால், அதில் பயங்கரமான வீழ்ச்சி ஏற்பட்டது. எனவே, நான்கு வருடங்களுக்குப் பிறகு நிலைமை எப்படி இருக்கும் என்று இன்றே தீர்மானித்து முடிவுகளை எடுப்பது சரியான அணுகுமுறை இல்லை. இன்று இந்தியப் பொருளாதாரத்தில் சீரான முன்னேற்றம் காணப்படுகிறது. உற்பத்தித் துறை, ஆட்டோமொபைல், மெக்கானிக்கல் என்று எல்லாத் துறைகளிலும் வேலைவாய்ப்புகள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. நாடெங்கும் நடைபெறும் சாலைப் போக்குவரத்து மேம்பாடு, பாலங்கள், விண்ணைத் தொடும் பல அடுக்குக் கட்டிடங்கள் போன்றவை சிவில் இன்ஜினியரிங் மாணவர்களுக்கான வேலை வாய்ப்புகளை அதிகரித்துள்ளன.



அமரர் ''கல்கி'' கிருஷ்ணமூர்த்தி அவர்களுடைய மூத்த சகோதரர் வேங்கடராமய்யர் அவர்களின் புதல்வரான புத்தமங்கலம், ஸ்ரீ வி.நடராஜன் - ஸ்ரீமதி ருக்மிணி தம்பதியின் சதாபிஷேக கல்யாண வைபவம் மயிலாடுதுறையில் 18.4.2010ல் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் அனுக்கிரஹா கல்யாண மண்டபத்தில் கூடியிருந்து வாழ்த்தியதுடன் சதாபிஷேகம் கண்ட தம்பதியின் நல்லாசிகளைப் பெற்று மகிழ்ந்தனர்.

தான்'' என்கிறார்.

''எந்தக் கல்லூரியில் உங்கள் பிள்ளைகளைச் சேர்ப்பது என்பதைக் கல்லூரிகள் செய்யும் விளம்பரங்களை வைத்தும், இணையதளங்களைப் பார்த்தும் மட்டுமே முடிவு செய்யாதீர்கள்'' என்று எச்சரிக்கிறார் ஜெயப் பிரகாஷ் காந்தி. மாநில அளவிலான உங்கள் ரேங்க் என்ன? போன வருடம் அந்த ரேஞ்சில் ரேங்க் வாங்கியவருக்கு எந்தக் கல்லூரியில், என்ன கோர்ஸ் கிடைத்திருக்கிறது என்று பார்த்து, நீங்கள் எந்தெந்தக் கல்லூரியில், எந்தெந்தக் கோர்ஸ்களில் சேர்வது என்று சிறிய பட்டியல் தயாரித்துக் கொள்ளுங்கள். அந்தப் பட்டியலில் உள்ள கல்லூரிகளுக்கு நேரில் சென்று பாருங்கள். அங்கே படிக்கும் மாணவர்களிடம் விசாரியுங்கள்; அதன் பிறகு திருப்தி இல்லாத கல்லூரிகளின் பெயர்களை உங்கள் பட்டியலிலிருந்து நீக்கிவிடுங்கள். கவுன்ஸிலிங் துவக்க நாளிலிருந்தே எந்த மாதிரியாக இடங்கள் நிரம்புகின்றன என்பதைக் கூர்ந்து கவனியுங்கள். இப்படி உங்களைத் தயார்ப்படுத்திக் கொண்டு கவுன்ஸிலிங்குக்குச் சென்றால், அநேகமாக அங்கே குழப்பம் இல்லாமல் உங்களுக்குத் தேவையான கல்லூரி மற்றும் கோர்ஸ் கிடைத்துவிடும்.

**கோர்ஸைத் தேர்ந்தெடுப்பதைவிட காலேஜைத் தேர்ந்தெடுப்பதுதான் சவாலாக உள்ளது**

**- எஸ். சந்திரமௌலி**

**Story page**

தமிழ் கெழு கூடல் தண்கோல் வேந்தே

— புறநானூறு



**தமிழ்த்தாய்க்கு ஐம்பொன்னால் சிலை வடித்திருக்கிறது தஞ்சைத் தமிழ்த்தாய் அறக்கட்டளை.**

''தமிழகத்திலேயே தமிழ்த்தாய்க்கு என முதன் முதலாக வடிவமைக்கப்பட்டிருக்கும் முதல் ஐம்பொன் சிலை!'' என்கிறார் தமிழ்த்தாய் அறக்கட்டளைச் செயலாளர், தஞ்சை மாவட்டத்தின் உடையார்கோயில் குணா.

'தமிழ்த்தாய் ஐம்பொன் சிலை எண்ணம் எப்படி வந்தது?' என்றோம். ''தமிழைச் செம்மொழியாக்க வேண்டும் என்கிற கோரிக்கையுடன், 2003-2004-ல் பதினைந்து இளைஞர்களுடன் இருமுறை விழிப்புணர்வு நடைப்பயணம் மேற்கொண்டோம். அறுபத்து மூன்று நாட்கள். ஆயிரத்தைநூறு கி.மீ. தூரம் நடைப்பயணம். அப்போது என் மனதில் உதித்ததே, தமிழ்த்தாய் ஐம்பொன் சிலை உள்ளடக்கிய தமிழ்த்தாய்க் கோட்டம்!'' எனக் குறிப்பிடுகிறார்.

சென்னை, எழும்பூர் ராஜரத்தினம் ஸ்டேடியம் அருகே வைரமுத்து, குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் ஆகியோர் ஊர்வலத்தைத் தொடங்கி வைத்தனர். அன்று மாலை ஆறு மணியளவில், முதல்வரின் கோபாலபுரம் இல்லம் எதிரே அடைந்தோம். நாற்காலி இருக்கை மீதமர்ந்து வந்த கலைஞர், தமிழ்த்தாய் ஐம்பொன் சிலையை ஏழெட்டு நிமிடங் கள் கூர்ந்து நோக்கினார். ''நல்லாவே அமைச்சுருக்கீங்க தமிழ்த்தாய் சிலையை!'' என்று மனந்திறந்து பாராட்டினார்.

அங்கிருந்து செங்கல்பட்டு, திண்டிவனம், புதுச்சேரி, காரைக்கால், திருக்குவளை, தூத்துக்குடி என இருபது நாட்கள் ஊர்வலமாகக் கடந்து வந்து, தற் போது கோவை மாநகரப் பகுதிகளில் பவனி வருகிறாள் தமிழ்த்தாய். உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடைபெற்று வரும் இந்த நேரத்தில், பலரது கவனத்தையும் ஈர்த்துள்ளது தமிழ்த்தாய் ஐம்பொன் சிலை.

''தமிழ்த்தாய் அறக்கட்டளை சார்பாக, புன்னைநல்லூரில் 'தமிழ்த்தாய்க் கோட்டம்' கட்ட இருக்கிறோம். தமிழகம் முழுவதுமாக தமிழ்த்தாய் ஐம்பொன் சிலை,



● குணா

காட்சிக்கென வரும்போது, தமிழர்கள் ஒவ்வொருவரும் தர இருக்கும் நிதியின் மூலம் 'தமிழ்த்தாய்க் கோட்டம்' உருவாக இருக்கிறது'' என்கிறார் குணா.

**சிலையை வடிவமைத்தவர் ஸ்தபதி க.மோகன்ராஜ்**

''மதுரை தமுக்கம் மைதான தமிழ்த் தாய் சிலை, பேரூர் மடத்தில் உள்ள தமிழ்த்தாய் படம், தஞ்சை தமிழ்ப் பல் கலைக்கழகத்தில் உள்ள தமிழ்த்தாய் ஓவியம், உலகத் தமிழ் மாநாட்டுக் கையேடுகளில் இடம்பெற்றிருந்த தமிழ்த்தாய் ஓவியங்களைக் கவனத்தில் எடுத்துக் கொண்டோம். முன்மாதிரியாக மெழுகுச் சிலை செய்து சென்னையில் பார்வைக்கு வைத்தோம். தமிழறிஞர் களின் கருத்துகளைக் கேட் டோம். பல அறிஞர்களின் கூற்றுக்களை உள்வாங்கி, மூன்று மாதப் பணியில் நிறைவானதே இந்த தமிழ்த் தாய் ஐம்பொன் சிலை. தமிழ்த்தாயின் பின்புறம் ஒளி வட்டச் சக்கரம், காதில் அணிந்திருக்கும் குண்டலம், மார்பில் தவழும் ஆரம் போன்றவை காற்றில் அசை யும் வண்ணம் இச்சிலை வடிவமைக்கப்பட்டுள்ளது!'' என்கிறார், சிற்பி மோகன் ராஜ்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



• க.மோகன்ராஜ்

# தமிழ்த்தாய்க்கு ஐம்பொன் சிலை!



# கல்கி



2010 ஜூலை 4
விக்ருதி ஆனி 20
மலர் : 68
இதழ் : 49

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## தழைக்கட்டும் தமிழ்ச் செம்மொழி!

**த**மிழ்ச் செம்மொழி மாநாடு பெருமைக்குரிய விதத்தில் நடைபெற்றுள்ளதைத் தமிழகம் ஆமோதித்து வரவேற்றுள்ளது. உலகளாவிய பங்கேற்பும் பிரும்மாண்டமான ஏற்பாடுகளும் முதல்வருக்கும் அவரது அரசுக்கும் பெருமை சேர்த்துள்ளன.

செம்மொழி என்ற சிறப்பு அந்தஸ்து பெற்றுள்ள தமிழின் உயர்வு நிகரற்றது. இதர பல செம்மொழிகள் (சம்ஸ்கிருதம், லத்தீன் போன்றவை) பேச்சு வழக்கொழிந்து விட்டன. அவை வளரும் மொழிகளாக இல்லாமல் பாதுகாக்கப்படும் மொழிகளாக மாறிவிட்டன. இந்த வருத்தத்துக்குரிய நிலைமை தமிழுக்கு ஏற்பட்டுவிடக்கூடாது என்பதில் நாம் மிகவும் கவனமும் எச்சரிக்கையும் கொள்ளவேண்டியிருக்கிறது.

ஆனால், இன்று நிலவும் அரசியல் சூழல், ஆரோக்கியமான வளர்ச்சிக்கு வழிகோலுவதற்குப் பதிலாக, தமிழையும் தமிழர்களையும் ஒரு மொழிவெறித் தீவுக்குள் கட்டுப்படுத்துவதாகவே இருக்கிறது.

பல்மொழிப் புழக்கம் உள்ள நம் நாட்டில், பொது மொழியான ஆங்கிலம் இணைப்பு மொழியாக அமைந்திருப்பது வரலாற்றுரீதியான நற்பயன். அதனை ஏற்பதனால், நாம் தமிழை அவமதித்தவர்களாகிவிட மாட்டோம். பொறியியல், மருத்துவம், சட்டம் போன்ற தொழில்முறை உயர்கல்விக்குத் தமிழில் பாடத் திட்டம் வகுத்து அளிப்பதும் நீண்டகால நோக்கில் உதவாது. இந்த மாநிலத்தில் உருவாகும் அத்தனை தொழில் வல்லுனர்களுக்கும்






இங்கே பணி கிடைத்துவிடுவதில்லை. அது சாத்தியமும் இல்லை. தமிழ் மட்டுமே பயின்றவர்கள் தமிழ்நாட்டை விட்டு வேறு எங்கு போய்ப் பணியாற்ற முடியும்?

உண்மையில் தமிழுக்குப் பேரிழுக்கும் அவமரியாதையும் இழைத்து வருபவை, முறையான உச்சரிப்புக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் துளியும் மரியாதை கொடுக்காத பண்பலை, தொலைக்காட்சி அலைவரிசைகள்தாம். இவற்றுள் பலவற்றில் அரசியல் வாதிகளுக்கு வர்த்தக ஈடுபாடு இருக்கிறது. தமிழ்ச் செம்மொழிக்குக் குரல்கொடுக்கும் இதே அரசியல்வாதிகள்தாம், இந்த ஒலி-ஒளி ஊடகங்களில் தமிழ்க்கொலைக்கும் பண்பாட்டுச் சீரழிவுக்கும் துணைபோய்க் கொண்டிருக்கிறார்கள்.

எல்லாவற்றினும் பெரிய கொடுமை, தமிழ்ச்செம்மொழி மாநாட்டையொட்டி முதல்வரை வாழ்த்துவதற்காக வெளியிடப்படும் விளம்பரங்களில்கூட, அம்மைவடுக்களைப் போல் எழுத்துப் பிழையும் கருத்துப்பிழையும் காணப்படுவதுதான்! ஒரு தலைமுறை தமிழை முறையாக எழுத, படிக்க, பேசத் தெரியாமல் உருவாகியிருப்பதையே இது உணர்த்துகிறது.

தமிழின் பிழையற்ற ஒலி-வரி வடிவங்களைக் கற்பிக்கவல்ல நல்லாசிரியர்களை உருவாக்கி, சிறப்புப் பயிற்சி அளித்து, அனைத்துப் பள்ளிகளிலும் ஐந்தாம் வகுப்பு வரை தமிழ்வழிக் கல்வியைக் கட்டாயமாக்க வேண்டும். அதே சமயம் ஆங்கிலத்திலும் குழந்தைகளுக்குப் பலமான அஸ்திவாரம் அமைய வேண்டும். உயர்படிப்புக்கு கல்லூரி களில் ஆங்கில வழி போதனையைக் கைவிடவே கூடாது. தேவைப்படும்போது தமிழில் விளக்கம் அளிக்கலாம். இவ்வாறு செய்வதன் மூலமே தமிழ் மொழியில் புலமையுடன் பற்றும் ஆங்கிலத்தில் நல்ல பரிச்சயமும் ஊட்ட முடியும். இந்த இரண்டும் இரு கண் களாக அமையப் பெற்ற தமிழர்களின் எதிர்காலம் வளம் பெறும். தமிழ்மொழி செம்மொழி அந்தஸ்தைச் சூட்டிக்கொண்டு நூல்களுக்குள் அடங்கிவிடாமல், சிறந்த மொழி பெயர்ப்பு கள் மூலம் உலகப் புகழ்பெற்றுத் தழைக்கும். ●

Scooty pep+

தமிழன் உயர்வுக்கும் தமிழ் அடிப்படை

— வ.சுப.மாணிக்கம்



தாட்பூட் தஞ்சாவூர்!

**நிருபர்:** தமிழுக்காகக் கலைச் சேவை செய்ய நீங்க தஞ்சாவூர் போகலியா?

**தமிழ் நடிகை:** ரொம்ப அக்கிரமுங்கோ! ஒங்க தமில் நாட்டிலே அய்க்கான தமிளுலே நான் சொல்பொலிவு செயக் கூடாதுன்னுட் டாங்கோ!

**"த**மிழ் தந்த அகஸ்தியர் தஞ்சாவூர் ஏற்பாடுகளைச் செஞ்சிருந்தா சிறப்பா இருந் திருக்கும்னு ஏன் சொல்றே?''

''கட் அவுட்டெல்லாம் ஒண்ணே முக்கால் அடிக்கு மேல இருந்திருக்காது!''

**"க**விதை எழுதும் பழக்கம் உள்ள கணக்கு ஆசிரியர் கேட்ட கேள்வியிலே கவிஞர்கள் குழம்பிப் போயிருக்காங்களாமே, அது என்ன கேள்வி?''

''ஒரு அட்சரம் லட்சம் பெறும் என்றால் ஒரு மகாநாடு எவ்வளவு கோடி பெறும்!''

**"க**வியரங்கத்திலே அமைச்சர் பழைய செய்யுளைத் தப்பாகச் சொல்லிவிட்டு எசகு பிசகாக நெளிந்தார்னு சொல்றீங்களே அப்படி அவர் சொன்னது என்ன?''

''ஊழலுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழியாக ஓடி மக்களுக்கும் சற்றே பாயுமாம்!''

\- ராமபிரான்

(கல்கி 1.1.95 இதழில் வெளியான ஜோக்ஸ்)

**அ**ளவுக்கு மீறி எதையாவது காதலிக்க முடியுமா என்ன? எல்லாவற்றுக்கும் எல்லை உண்டு. ஆனால் காதலுக்கு..? காதலிப்பது நம் தனிப்பட்ட உரிமை. அதற்காகக் காதலிப்பவர் நம் உடைமைப் பொருளாக முடியுமா என்ன?

அப்படித்தான் சாதனா மீது நான் கொண்ட, பிரபஞ்ச விரிவுக் காதலும்; என்னுள் சாதனாவின் மேல் கொண்ட காதல் நாளுக்கு நாள் வளர்ந்து சாதனை புரிந்து கொண்டிருக்க... அவள் என்னவள் என்றே நம்ப ஆரம்பித்துவிட்டேன்.

''ஏய்... நீ என்னவள்டி...''

''நீ... எனக்கு மட்டும்தான்'' - இதில்தான் ஆரம்பித்தது சிக்கல்... அவள் வேறு யாருடன் பேசினாலும் எனக்குக் கோபமும், பட படப்பும் வந்தது.

முக்கியமாக, அவள் கணவனுடன்... 'ஙே' என்று புருவம் உயர்த்துபவர்களுக்கு... நான் கவிஞன். கதை சொல்லுபவன். ஒரு சமுதாயத்தின் கண்ணாடி. கண்ணாடிக்கு ரசமாய் இருப்பவர்கள், பெண்கள் / ஆண்கள், சமுதாயம் etc... அல்லவா? நல்ல கண்ணாடியாய் இருக்க, என் பின்னே பல மனிதர்களை ரசமாக்கிக் கொள்கிறேன். நிறையக் கதைகள், கவிதைகள் கிடைக்கும். ஏதோ என்னால் முடிந்த உதவி. சரி கதையை விட்டு எங்கோ போய்விட்டேனே. கதையைப் பார்ப்போம். எங்க வுட்டேன், ஆங்... சாதனா அவள் கணவனுடன் பேசுவதைக்கூட என்னால் தாங்க முடியவில்லை. எதிர் வீட்டில் அவள்; நான் எழுதும் அறையின் ஜன்னல் அவள் வீட்டை அப்பட்டமாகக் காண்பிக்கிறது.

**நான் உற்சாகமாக இருந்தால், சாதனா சோகமாக இருப்பதாக எழுதுவேன்**

நான் வந்த புதிதில், அவள் வீட்டில் ஆங்காங்கே அறை வாசல்களில் திரைச் சீலைகள் அசைந்து கொண்டு மறைத்துக் கொண்டுதான் இருந்தன, வீட்டின் நிகழ்வுகளை...

என் பார்வையின் வசீகரமோ, உறுத்தலோ, சில நாட்களில் அந்த வீடு முற்றிலும் திரைச் சீலை ஆடைகளைக் கழற்றிவிட்டு, எனக்கு வசதியாய்த் தன்னை, தன்னுள் நடப்பதை காண்பித்தது. இரவு நேரங்களில் மின்சார பல்பு வேறு, வெளிச்சம்போட்டு...

இரண்டு கவிதை நூல்களும், மூன்று சிறுகதைத் தொகுப்பும் போட்டுவிட்டேன். எல்லாவற்றின் ஆரம்பப் புள்ளியும், முற்றுப் புள்ளியும் சாதனாதான். புரட்சிகரமான இளம் எழுத்தாளனாய்ப் பெயரும் வாங்கிவிட்டேன். அது சரி, இப்போ என்னாச்சு.

நான் உற்சாகமாக இருந்தால், சாதனா சோகமாக இருப்பதாக எழுதுவேன்... மனமளவெனக் கற்பனை மின்னலாய்க் கிளைவிட, மற்றோர் பேப்பரை எடுத்து எழுத ஆரம்பித்தேன்.

சாதனா அவள் வீட்டு ஹாலில் சோகமாக அமர்ந்திருப்பது தெரிகிறது. ஏன்? எழுத்து மும்முரத்தில், கொஞ்ச நேரம், என்ன நடந்தது எனக் கவனிக்கத் தவறிவிட்டேனா?



ஜெயக்குமாரி தணிகாசலம்

உற்றுப் பார்த்தேன்.

அவள் கணவன் மற்றோர் அறையிலிருந்து வருகிறான். அவளோடு ஏதோ கோபமாகக் கத்துவது போலத் தெரிகிறது. சாதனாவும் எழுந்து நின்றாள். கெஞ்சுவது போன்ற அபிநயத்துடன் ஏதோ பேசுகிறாள். கணவன் மறுக்கிறான். கீழே குனிந்து எதையோ எடுத்தான். சூட்கேஸ்? அவள் கைகளில் திணித்து அவளைப் பிடித்து இழுத்து வந்து வாசலுக்கு வெளியே தள்ளினான். பின் என் வீட்டைக் காட்டி ஏதோ கத்துகிறான். டமால் எனக் கதவை ஓங்கிச் சாத்த... சாதனா கண்களைத் துடைத்துக் கொண்டு பெட்டியைத் தூக்கிக் கொண்டு என் வீட்டை நோக்கி வர ஆரம்பித்தாள்.

சரியாய் அதே நேரம், ''ஏங்க இந்தாங்க, காஃபி'' என்றபடி என் மனைவி சாதனா, காஃபி டம்ளரை என் முன்னே நீட்டவும். பொருட்களை ஏற்றி வந்த டெம்போ எதிர்வீட்டில் நின்றது.

'புஜ்ஜிகுட்டி' என்றவாறு காஃபி டம்ளரை வாங்கியவன், எதிர்வீட்டைப் பார்த்தபடியே இருந்தேன். பல வருடங்களாகப் பூட்டிக் கிடக்கும் அந்த வீட்டில்...

''ஏங்க, நம்ம எதிர்த்த வீட்டுக்கு பிரபல நாவலாசிரியர் சந்திரன் குடிவர்றாராம். போறப் போக்குல இந்தத் தெருவே எழுத்தாளர் தெருவாயிடும் போலிருக்கு'' என்றாள் என் அருமை மனைவி சாதனா, வாசலில் அசைந்த திரைச்சீலையைத் துவைக்க கழற்றியபடி...

சில நாட்களில் எதிர்வீட்டு ஜன்னல் திறக்கப்பட, பைஜாமா சகிதம், 'அவர்'- அவர் வீட்டு அந்த ஜன்னல் வழியே என் வீட்டைப் பார்த்துக் கொண்டேயிருந்தார்.

தமிழில்:
**கிரேஸி மோகன்**

மூலம் மூதாதையன்:
**இன்கமோ ஸிரேகி**



# குப்பாச்சுலு—
## (மாமியாரும்—

**காட்சி - 1**

**காலம் :** பாறாங்கற்காலம் (கற்காலத்திற்கும் முந்திய காலம்.)

**இடம் :** மிருக நடமாட்டமே இல்லாத பயங்கரமான காட்டின் ஒரு பகுதி.

**பாத்திரங்கள் :** கதாநாயகி 'பிடாரி' யின் தந்தை 'இடும்பன் காட்டேரி' கதா நாயகியை ஐம்பது மாதம் வயிற்றில் சுமந்து பெற்ற (நமது மூதாதையர்கள் நம்மைவிட எதிலும் ஐந்து மடங்கு அதிக மாகவே இருந்தார்கள்.) தாய் 'இருளச்சி,' மற்றும் அக்கம்பக்கத்துக் காட்டு மிராண்டி கள். இது தவிர, இவர்கள் செல்லமாக வளர்க்கும் யானை, மலைப்பாம்பு, காண்டாமிருகம், டயனாசரஸ் போன்ற மிருகங்கள் அங்கு சுவாதீனமாக அலைந்து கொண்டிருந்தன.

கதாநாயகியின் தந்தை 'இடும்பன் காட்டேரி' தாழ்வான ஒரு மரக்கிளையில், கன்னத்தில் கைவைத்தபடி தலைகீழாகத் தொங்கிக்கொண்டு, முன்னும் பின்னும் சோகமாக ஆடிக் கொண்டிருக்கிறான்.

தனது எஜமானரின் சோகமான மன நிலையைப் புரிந்து கொள்ள முடியாத, ஐந்தறிவு படைத்த நீர் யானை ஒன்று அப்போது அங்குவந்து 'இடும்பன் காட் டேரி'யை விளையாட்டாகச் சீண்டி விட, அதனால் கோபமுற்ற இடும்பன் காட் டேரி, நீர்யானையின் கன்னத்தில் பளா ரென்று அறைய, நீர் யானை அழுது கொண்டே கண்ணீர் யானையாக மாறி ஓட்டம் பிடித்தது. கண வனுக்காக ஆசையாக ஒரு முழுக் காட்டெருமையை அலட்சியமாகக் கொம்பைப் பிடித்தவண்ணம் காட்டுத் தீயில் 'ரோஸ்ட்' செய்து கொண்டிருந்த இடும்பன் காட்டேரியின் மனைவி இருளச்சி - நீர்யானையின் அழுகுரல் கேட்டு ஓடி வருகிறாள்.

**இருளச்சி :** (பூமி அதிர ஓடிவந்து) இன்னிக்கு என்னாச்சு உங்களுக்கு? ஏன் இப்படி காலைலேர்ந்து சிடுசிடுன்னு இருக்கீங்க. அக்கம்பக்கத்துல உள்ளவங் கள்ளாம் தப்பா நெனைச்சுக்கப்போறாங்க... (என்று அவளால் முடிந்த வரையில் தாழ் வான குரலில் கேட்க, அந்த சத்தத்துக்குப் பயந்தே பறவைகள் எல்லாம் சிறகடித்து கூட்டுக்குள் ஒளிந்தன.)

**இடும்பன் காட்டேரி :** என்னை ஒன்னும் கேக்காதே. எனக்கு மனசு சரி யில்லை! (என்று கோபமாகக் கூறி விட்டுத் தலைகீழாகத் தொங்கிக் கொண்டி ருந்தவன், மணிக்கு முந்நூறு கிலோ மீட்டர் வேகத்தில் முன்னும் பின்னும் வெறித்தனமாக ஊஞ்சலாட, அவனது ஆட்டத்தைத் தாங்க முடியாமல் அந்தப் பிரும்மாண்டமான ஆலமரம் வேரோடு பிடுங்கிக்கொண்டு கீழே சாய்ந்தது.)



# கோட்பட்ரி

## மருமகளும்)

**இருளச்சி :** கீழே விழுந்த ஆலமரத்தை 'நாளை அடுப்பெரிக்க உதவும்' என்ற எண்ணத்தில் அதை, நான்காக உடைத்து ஒரு ஓரமாகப் போட்டுவிட்டு, (கீழே விழுந்ததால் கணவனின் உடம்பில் படிந்த புழுதியைத் தட்டிவிட்டவண்ணம்) உங்களுக்கு மனசு சரியில்லேன்னு எனக்கு அப்பவே தெரியும்...

**இடும்பன் காட்டேரி :** எப்படி? (என்று உரத்த குரலில் கர்ஜிக்க.)

**இருளச்சி :** (கணவனின் கூச்சல் தாங்காமல் தனது இரு செவிகளிலும் உடைந்த ஆலமரக் கிளையை நுழைத்துக்கொண்டு) சேச்சேச்சே... ஏன் இப்படிக் காட்டு மிராண்டியாட்டம் கத்தறீங்க? உங்க கவலை என்ன? மொதல்ல அதைச் சொல்லுங்க.

**இடும்பன் காட்டேரி :** என்ன இருள்... (இருளச்சியை செல்லமாக இருள் என்று

சந்தோஷத்தில் அழைப்பது வழக்கம்) நீயும் புரியாம பேசற... வர வைகாசி யோட நம்ப பொண்ணு பிடாரிக்கு (கதா நாயகி) நூத்து ஐம்பது வயசு முடியறது. அவளைப் பொறுப்பா ஒருத்தன்கிட்ட கல்யாணம் கட்டிவச்சுட்டா, நானும் மீதி இருக்கிற சொச்சநச்ச இருநூறு வருஷத் தைத் தள்ளிட்டுக் கண்ணை மூடலாம்னு பாத்தா, பிடாரிக்கு ஒரு வழி பொறக்க மாட்டேங்குதே, அதான் கவலையா யிருக்கு...

**இருளச்சி :** பூ... இவ்வளவுதானா!



(என்று கூறி காரித் துப்புகிறாள். அப் பொழுது அவள் துப்பிய உமிழ் நீர் அங்கு ஒரு ஓடையாக மாறி ஓடுகிறது. அப் பொழுது கதாநாயகி பிடாரி தனது இரு கைகளாலும் ஒரு காட்டு யானையின் தும்பிக்கையைப் பிடித்துக் கரகரவென்று தட்டாமாலை சுற்றிக்கொண்டே வரு கிறாள். பிடாரி, மாதா பிதாவைப் பார்த்த சந்தோஷத்தில் வேகமாகச் சுற்றிக் கொண்டிருந்த யானையின் தும்பிக்கையை விட, யானை எட்டு மைல் தள்ளி அதே வேகத்தில்போய் விழுகிறது.)

**இடும்பன் காட்டேரி :** என்னம்மா பிடாரி, இன்னும் எத்தனை நாளைக்கு தான் இப்படி விளையாட்டுப் பொண்ணா இருக்கப் போற... உன்னை கல்யாணம் பண்ணிக் கொடுத்து ஒருத்தன் கைல ஒப்படைச்சுடறதா நானும் உங்கம் மாவும் முடிவு பண்ணியிருக்கோம். நீ என்ன சொல்ற?

**பிடாரி :** போப்பா... எனக்கு வெக் கமா இருக்கு. (ஏற்கனவே அட்டைக் கரியாய் இருந்த அவள் முகம், நாணத்தால் மேலும் கறுக்க, தனக்குத் திருமணம் என்று பெற்றோர்கள் தன் எதிரிலேயே குறிப்பிட்டதால் உண்டான கூச்சத்தில் அந்த இடத்தை விட்டு எழுந்து ஓட ஆரம்பித்தாள்.)

**இடும்பன் காட்டேரி :** ம்... பாவம் அறியாப்பொண்ணா இருக்கா நம்ம பிடாரி. நாளைக்கு புருஷன் வீட்டுல போய் எப்படித்தான் குப்பை கொட்டப் போறாளோ! ம்... (என்று கூறி பெரு மூச்சுவிட, அவன் நாசியிலிருந்து புறப் பட்ட சுவாசக்காற்று அங்கு தற்காலிகப் புயலாகச் சில நிமிடங்கள் வீசுகிறது.)

**இருளச்சி :** ஏன்னா... உங்க பிரண்டு ஒருத்தர் பக்கத்து காட்டுல இருக்காரே அவர் பேர் என்ன?

**இடும்பன் காட்டேரி :** யாரைச் சொல்ற? (குழப்பத்தால் தனது பரட்டைத் தலையை அவன் சொறிந்து கொள்ள, தலைமுடிக் கொத்திலிருந்து பல்லி, தேள், கரப்பான்பூச்சி போன்ற சிறு சிறு ஜந்துக் கள் குதித்து ஓடுகின்றன.)

> "இன்பத்துக்கும் துன்பத்துக்கும் இடையே என்ன சார் வித்தியாசம்கிறீங்க...?"
> "காதலுக்கும் கல்யாணத்துக்கும் இடையே உள்ள வித்தியாசம்தான்!"
>
> **- ராசை.உ.குணசீலபாண்டியன்**

**இருளச்சி :** அதாங்க... ஆளுகூட குள்ளமா முப்பது அடி உசரத்துக்கு தக்கூனூண்டுக்கு இருப்பாரே....

**இடும்பன் காட்டேரி :** யாருடி நம்ப பிரம்மராட்சஸனைச் சொல்றியா?

**இருளச்சி :** அவரேதான். அவர் பையன் கூட கோரஸ்வரூபன்கற, பேருக்கேத்த மாதிரி பாக்க லட்சணமா இருக்கான். மத்த பசங்க மாதிரி தறுதலையா இல்லாம சமத்தா தினமும் வேட்டையாடி கைநெறைய புலி, சிங்கம், கரடினு சம்பாதிக்கறான். நம்ப பிடாரியை அவனுக்கு கட்டி வச்சா பொருத்தமா இருக்கும்.

**இடும்பன் காட்டேரி :** நீ சொன்னா சரிதான். தோ இப்பவே போய் பிரம்ம ராட்சஸனைப் பாத்துக் கல்யாணம் பேசி முடிச்சுட்றேன். சுபஸ்ய சீக்கிரம்னு பெரிய வங்க சொல்லியிருக்காங்க... (என்று கூறிவிட்டு இருந்த இடத்திலிருந்தே ஒரு குதி குதித்து இடும்பன் காட்டேரி பக்கத் துக் காட்டிற்குத் தாவுகிறான்.)

"உங்ககிட்ட எப்படி ரோடு போடற கான்ட்ராக்ட்டை அமைச்சர் கொடுத்தார்?"

"ஹி... ஹி... பேஸ்ட் அளவு மாவு எடுத்து ரோஸ்ட் போட்டுக் காட்டினேனே!"

– **காழி.ஆர்.சீதாராமன்**



## காட்சி - 2

**இடம் :** உயரமான ஒரு ஆல மரத்தின் உச்சியில் பிரம்மராட்சஸனின் வீடு.

**பாத்திரங்கள் :** பிரம்மராட்சஸன், அவன் மனைவி அகரபுஷ்டி நாயகி, இடும்பன் காட்டேரி.

*(திருமணப் பேச்சு வார்த்தை நடக் கிறது.)*

**இடும்பன் காட்டேரி :** முடிவா நீங்க என்ன சொல்றேள்?

**அகரபுஷ்டிநாயகி :** தோ பாருங்கோ, உங்க பொண்ணுக்கு என் பையனைத் தரதுல எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனா நீங்க வரதட்சணையா நாப்பத்து ரெண்டு யானை, முப்பது சிங்கம், இருபத்து நாலு புலி தரணும். இது தவிர கல்யாணத்துக்கு எம் புள்ளையோட பிரண்ட்ஸ்லாம் வருவா. அவாளுக்கு மட்டும் எப்படியாவது முகூர்த்தத்தின் போது தனியா பந்திபோட்டு 'நரமாமிசம்' போட்டுடுங்கோ. ஜானவாசம் ரத்தவினாரி அம்மன் கோவில்லேந்து வச்சுக்கறதா இருக்கோம். ஜானவாச ஊர்வலம்னா மெதுவாகத்தான் நகரணும். எப்படியாவது சிரமப்பட்டு கடல் ஆமையை ஊர்வலத் துக்கு அழைச்சிண்டு வந்துடுங்கோ.

**இடும்பன் காட்டேரி :** நீங்க சொன்ன தெல்லாம் எப்படியாவது தலையை அட மானம் வச்சாவது தந்துடறேன். அந்த வரதட்சணையை மட்டும் நீங்க குறைச்சுக் கணும். இப்ப இருக்கற வெலைவாசில இருபத்திநாலு புலி கொஞ்சம் கஷ்டம்னு எனக்குப் படறது. நானும் எம் பொண்ணு கல்யாணத்துக்காக எப்படியோ கஷ்டப்

பட்டு வேட்டையாடி நீங்க சொன்ன யானை, சிங்கம்லாம் சேர்த்து வச்சுட்டேன். புலி வேட்டை இப்பல்லாம் ரொம்ப அபூர்வமா போயிடுத்து! உங்க புருஷனுக்கே தெரியும். என்கிட்ட இப்பத் திக்கு இருபது புலி இருக்கு. மீதி நாலு புலிக்கு பதிலா எட்டு காட்டுப் பூனையை தந்துடறேன். பாக்க புலிமாதிரியே இருக்கும்.

**அசுரபுஷ்டிநாயகி :** அதாவது சுந்தி வளைச்ச அசல் புலிக்கு பதிலா எவர் சில்வர் புலியை என் தலைல கட்டப் பாக்கறீங்க, இல்லியா. தோ பாருங்கோ, நான் சொன்னதெல்லாம் கொடுக்கற பட்சத்துல நாம மேற்கொண்டு கல்யாணத்தைப்பத்தி பேசலாம். அப்புறம் உங்க இஷ்டம். *(தனது கோபத்தைக் காட்ட பல்லை நரநரவென்று கடித்து ஒலிபிலா சத்தம் உண்டாக்குகிறாள்.)*

**இடும்பன் காட்டேரி :** மன்னிச்சுக்கணும். தெரியாம பேசிட்டேன். எப்படியாவது இருபத்துநாலு புலியை கல்யாணத்துக்குள்ள தேத்திடறேன்! *(என்று கூறி விட்டு தாழ்வான குரலில் தனக்கு மட்டும் கேட்கும்படி பேசுகிறார். தூத்தரி... என்னிக்குத்தான் இந்த வரதட்சணைக் கொடுமை ஒழியுமோ!)*

### காட்சி - 3

**இடம் :** வசதி படைத்தவர்கள் மட்டும் திருமணம் நடத்தும் 'பாழும் குகைச் சத்திரம்'.

**பாத்திரங்கள் :** மணமக்கள், அவர்களுடைய பெற்றோர்கள், மற்றும் அண்டை அசல் காட்டிலிருந்து திருமணத்திற்கு வந்துள்ள காட்டுமிராண்டிப் பெரியவர்கள். பிடாரி-கோரஸ்வரூபன் திருமணம் நடக்கிறது. வந்தவர்கள் எல்லோரும் தங்கள் சக்திக்கேற்ப ஆடு, மாடு, புலி, கரடி என்று மணமக்களுக்கு பரிசாக 'மொய்' எழுதுகிறார்கள்.

மணமகள் பிடாரியின் கழுத்தில் தாலி கட்டி மூன்று முடிச்சு போடும் சமயத்தில், மணமகன் கோரஸ்வரூபன் மூன்றாவது முடிச்சை சுபாவமான வெறியில் இறுக்கமாகப் போட, அதனால் மூச்சுத் திணறிய பிடாரி 'குய்யோ முறையோ' என்று மங்களமாகக் கூவுகிறாள்.

### காட்சி - 4

**இடம் :** கோரஸ்வரூபன் வீடு.

**பாத்திரங்கள் :** கோரஸ்வரூபன், புது மனைவி பிடாரி, பிடாரியின் மாமியார்க்காரி அசுரபுஷ்டி நாயகி.

*(கல்தோன்றி மண் தோன்றாக் காலத்திலேயே ஆரம்பித்துவிட்ட மாமியார்-மாட்டுப் பெண் மோதல் இங்கும் அவர்களுக்கே உரிய பாணியில் நடக்கிறது.*

*கோரஸ்வரூபன், அறையின் நடுவில் கோடரியால் வெட்டப்பட்டவனின் மரண ஓலம் போல பயங்கரமான சப்தத்தோடு குறட்டை விட்டவண்ணம் ஆழ்ந்த நித்திரையிலிருக்கிறான்.*

*அப்போது அவனது தாய் அசுரபுஷ்டி நாயகி தலைவிரிகோலமாக ஓடி வந்து தனது மகனை ஒரு உதை உதைத்து எழுப்புகிறாள்.)*

**அசுரபுஷ்டிநாயகி :** அடேய் கோரஸ்வரூபா! உம் பொண்டாட்டி செஞ்ச காரியத்தை பாத்தியா... என் தலைல கொட்டிட்டாடா! *(தலையைக் காட்டுகிறாள். பிடாரி குட்டிய இடத்திலிருந்து*

## "அடே கோரஸ்வரூபா உன் பொண்டாட்டி

ரத்தம் பெருகி ஓடுகிறது.)

**பிடாரி :** (ஓடி வந்து) ஒண்ணு மில்லை. நான் லேசா குட்டினதுக்கே உங்கம்மா இப்படி அமக்களம் பண் ணறாளே! இவங்க செஞ்ச சில் மிஷத்தை பாருங்கோ! (என்று கூறி உள்ளங் கையைக் காட்டுகிறாள். அதில் பிடாரியின் அறுந்த காது இருக்கிறது.) உங்கம்மா என் காதை அறுத்துட்டான்னா! (என்று கூறி ஓலம் இடுகிறாள்.)

**அகரபுஷ்டிநாயகி :** நான் என்ன வேணும்னா இவ காதை அறுத்தேன். எம் முதுகுல இவ கத்தியால குத்திட்டாடா.

**பிடாரி :** நம்பாதீங்கோ. உங்கம்மா பொய் சொல்றா.

**அகரபுஷ்டிநாயகி :** எனக்குத் தெரியும். நீ இப்படிச் சொல்லுவேன்னுதான் நான் முதுகுல குத்தின கத்தியை எடுக்காம அப் படியே வச்சிருக்கேன். நீயே பாரு! (என்று கூறி முதுகைக்காட்ட அங்கு மூன்று அங்குல ஆழத்துக்கு ஒரு பிச்சுவா பதிந் திருக்கிறது.)

**கோரஸ்வரூபன் :** சேச்சே.... பொழுது விடிஞ்சு பொழுதுபோனா எப்பப் பாரு



# என் தலைல கொட்டிட்டா.”

உங்க சண்டையைக் கேட்டுக் கேட்டு புளிச்சுப் போச்சு. ஏண்டா வீட்டுக்கு வரோம்னு இருக்கோம். இதெல்லாம் பாக்கறச்சே பேசாம 'ஆபீசே' கதின்னு அங்கயே பழியாக் கிடந்துடலாம் போல ருக்கு.

அகரபுஷ்டிநாயகி, பிடாரி (இருவரும் ஒரே சமயத்தில்) ஆபீசா! அப்படீன்னா என்ன அர்த்தம்?

**கோரஸ்வரூபன் :** எவனுக்குத் தெரியும் அர்த்தம். ஏதோ விரக்தியில சொல் லணும்னு தோணித்து சொன்னேன்.

**பின்குறிப்பு** - கோரஸ்வரூபன், மாமி யார் - மாட்டுப்பெண் சண்டையால் வெறுத்து உச்சரித்த 'ஆபீஸ்' என்ற வார்த்தை நாளடைவில் பிரபலமாகிப் பலராலும் பேசப்பட்டது. வீட்டில் பிடுங்கல் காரணமாக நிம்மதியாகத் தூங்க முடியாமல் தவித்த மனிதன், அன்று முதல் வெளியில் 'ஆபீஸ்' என்ற பெயரில் ஒரு ரம்மியமான இடத்தைத் தோற்று வித்துப் பகல் நேரங்களில் சௌக்கிய மாகத் தூங்க ஆரம்பித்தான்.

**(முடிவு)**




## யு.எஸ்.ஏ.பக்கம்

### என்னதான் சாப்பிடுகிறார்கள் ஞாபக சக்திக்கு?

"இவர்கள் என்னதான் சாப்பிடுகிறார்கள்! இவ்வளவு கூரிய ஞாபக சக்தி எப்படி இவர்களிடம் வந்தது?" என்று அமெரிக்கர்களே மூக்கில் விரலை வைக்கும் வண்ணம், அமெரிக்காவில் சக்கைபோடு போடுகிறார்கள் இந்திய வம்சாவளி வந்த மாணவ, மாணவிகள்.

கடந்த பன்னிரண்டு வருடங்களாகப் பள்ளி மாணவ மாணவிகளுக்காக நடத்தப்படும் ஸ்பெல்லிங் போட்டியில் இதுவரை எட்டு பரிசுகளை தட்டிச் சென்றுவிட்டார்கள். இவர்களெல்லாம் எட்டாவது கிரேட் படிக்கும் மாணவ மாணவிகள்.

இந்த வருடம் டிராபியைத் தட்டிச் செல்லும் மாணவி பதினான்கு வயது அனாமிகா வீரமணி. இந்த மாணவியோடு இறுதிப் போட்டிக்கு வந்த மாணவியும் இந்திய வம்சாவளி வந்த சாந்தனு ஸ்ரீவஸ்தா. அனாமிகா வீரமணி ஸ்ரீ வஸ்தாவைத் தோற்கடித்து நாற்பதாயிரம் அமெரிக்க டாலர்களை வெற்றிப் பரிசாகப் பெற்றார்.

ஸ்பெல்லிங் போட்டி சாதாரணச் சொற்களைக் கொண்டதல்ல. ரொம்பவும் கடினமானதாகும். பொருளியல், மருத்துவம், சட்டம், உளவியல், வானவியல், கணிதம் போன்ற சப்ஜெக்டுகளிலிருந்து எடுக்கப்பட்ட சொற்களைப் போட்டியாளர்களுக்குக் கொடுப்பார்கள்.

முதன் முதலில் இந்தப் போட்டியில் வெற்றிப் பெற்ற இந்திய வம்சாவளிப் பெண் நுபுர் லாலா. 1999-ல் இந்தப் பெண் பரிசைத் தட்டிச் சென்றாள். அதற்குப்பின் இந்திய மாணவ மாணவிகளின் ஆதிக்கம் தான். அமெரிக்காவின் ஜனத்தொகையில் ஒரு சதவிகிதம், இந்திய வம்சாவளி வந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அனாமிகா கரெக்டாகச் சொன்ன ஆங்கிலச் சொல் என்ன தெரியுமா? Stromuhr.

# ஸ்பெல்லிங் ட்ராஃபி!

### லூசியானா கவர்னர் ஒரு பஞ்சாபி

அமெரிக்காவின் லூசியானா மாகாணத்தில் 55-வது கவர்னராக இருப்பவர் 39 வயது பியுஷ் பாபி ஜிண்டால் என்ற இந்திய வம்சாவளி வந்த அமெரிக்கர். இவரின் தந்தை அமர் ஜிண்டால் பஞ்சாப் மாகாணத்தில் கான்பூரா என்ற கிராமத்தில் பிறந்தவர். இவர் 1970-ல் அமெரிக்காவுக்குக் குடியேறிய மறுவருடம் இவர்களுக்கு மூத்த மகனாகப் பிறந்தவர் பியுஷ் ஜிண்டால்.

2007-ல் கவர்னர் பதவிக்குப் போட்டியிட்டு வெற்றியும் பெற்றார். இவர் கவர்னர் பதவி ஏற்றதிலிருந்து, இரண்டு சட்டங்களை வெற்றிகரமாகக் கொண்டு வந்தார். பெடரல் திருமணத் திருத்தத்தின் மூலம் ஓரினத் திருமணத்தைச் சட்ட விரோதமாக்கினார். அடிக்கடி செக்ஸ் குற்றம் செய்பவர்களுக்கு, ஆண்மை சிதைப்புச் சட்டத்தையும் அமுலாக்கினார்.

2008-ல் துணை அதிபர் பதவிக்கு ரிபப்ளிகன் கட்சியின் சார்பாக இவரின் பெயரும் சிபாரிசு செய்யப்பட்டது. 2012-ல் அதிபர் பதவிக்கு இவரின் கட்சியின் சார்பாகப் போட்டியிடுவார் என்ற ஹேஷ்யமும் நிலவுகிறது.

கென்யா வம்சாவளி வந்த ஒபாமா அதிபராக வர வாய்ப்பு இருக்கும் பொழுது, ஜிண்டாலுக்கு சந்தர்ப்பம் இல்லாமலா போய்விடும்?

''நான் தயாராக இல்லை!'' என்கிறார் ஜிண்டால்.

### என்றுதான் தொலையுமோ இந்த இனத் துவேஷம்...!

''வெள்ளை மாளிகைக்கு ஒரு 'அநாகரிகத் தலைமையை' அனுப்பியாகிவிட்டது. கவர்னர் மாளிகைக்கு இன்னொரு 'அநாகரிகத் தலைமையை' அனுப்ப முயற்சியா?'' - ஆப்ரிக்க, ஆசிய வம்சாவளி வந்த அமெரிக்க அரசியல் தலைவர்களை இப்படிக் கேவலமாகக் கோடிட்டுப் பேசியவர் சவுத் கரோலினா செனட்டர் ஜேக் நட்ஸ்.

இப்படி அவர் பேசியதற்குக் காரணம்... இந்திய சீக்கிய வம்சாவளி வந்த திருமதி நிக்கி ஹீலி, சவுத் கரோலினா கவர்னர் பதவிக்காக ரிபப்ளிகன் கட்சியின் சார்பாகப் போட்டியிட இருக்கிறார்.

கவர்னர் பதவிகளையெல்லாம் இந்திய வம்சாவளி வந்தவர்கள் அள்ளிச் சென்றுவிடுவார்களோ என்ற பயத்தினாலோ என்னவோ, ஜேக் நட்ஸ் இப்படித் தடம் புரண்டு பேசியிருக்கிறார்.

இனவாத அடிப்படையில் பேசிய ஜேக் நட்ஸ், செனட்டர் பதவியிலிருந்து ராஜினாமா செய்ய வேண்டுமென்று அரசியல் வாதிகளும், என்.ஜி.ஓ. அமைப்புகளும் குரலெழுப்பிக் கண்டனம் செய்தனர்.

ஜேக் நட்ஸ் சாமர்த்தியமாக, ''இதை நான் ஜோக்காகச் சொன்னேனே தவிர, யாரையும் புண்படுத்துவதற்காக அல்ல! அதற்காக மன்னிப்பு கோருகிறேன்!'' என்றார்.

**- மலேசியாவிலிருந்து**
**ஏ.வி.எம்.ஹாஜா**



• பாபி ஜிண்டால்



• நிக்கி ஹீலி

# Techy page

## நறை பழத்த துறைத் தீந்தமிழின் ஒழுகு நறுஞ் சுவையே

"**ந**ம்ம தமிழ் இலக்கணம் என்பது மனிதர்கள் புரிந்துகொள்வதற்கு எழுதப்பட்டது. அதைக் கணினி புரிந்துகொள்ளும் வகையில் மாற்றுவது முக்கியம். அப்படிச் செய்தால்தான் தமிழ்க் கணினித் துறையில் முன்னேற்றங்கள் ஏற்படும்'' என்று பேசத் தொடங்கியவர் பேராசிரியர் நா.தெய்வசுந்தரம். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் மொழியியல் துறையின் தலைவர்.

''இன்றைக்குத் தமிழில் ஃபாண்ட், கீபோர்ட், என்கோடிங் போன்ற விஷயங்கள் எல்லாம் ஒரு தீர்வுக்கு வந்துவிட்டன. ஒரு காலத்தில் இதிலெல்லாம் தீர்மானம் இல்லாமல் குழப்பம் இருந்ததுண்டு. என்ன என்கோடிங் பயன்படுத்த வேண்டும். மற்றவர்களுக்கு அந்த என்கோடிங் புரியுமா என்றெல்லாம் இருந்த தயக்கங்கள், குழப்பங்கள் தீர்ந்துவிட்டன. இப்போது நாம் அடுத்த கட்டத்துக்குப் போகவேண்டும். அது கணினி மொழியியல். கம்பியூடேஷன் லிங்கிவிஸ்டிக்.''

அது என்ன கணினி மொழியியல்? நாம் கணினியில் தமிழைப் பயன்படுத்துவது அதிகரித்து வருகிறது. இப்போது யாரும் கணினியை பழைய டைப்ரைட்டர் மாதிரி பயன்படுத்துவதில்லை. அதன் பயன்கள், எதிர்பார்ப்புகள் விரிந்துவிட்டன.

கணினி மூலம் ஒரு மொழியில் இருந்து இன்னொரு மொழிக்கு மொழி பெயர்க்க முடியுமா? வாய்மொழியாகப் பேசுவதை என் கணினி நேரடியாக தட்டச்சு செய்தால் எப்படி இருக்கும்? எழுத்தால் எழுதியதை என் கணினி உரையாக வாசித்தால் எப்படி இருக்கும்? ஒன்றுமில்லை, அடுத்த முறை கிரெடிட் கார்ட் பாக்கியைத் தெரிந்துகொள்ள தொலைபேசியை எடுத்தால், கீறல் விழுந்த ரெக்கார்ட் பிளேயர் மாதிரி அது சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டு இராமல், என் தேவையைப் புரிந்து கொண்டு, எனக்குத் தேவையான தகவல்களை எனக்குப் புரியும் மொழியில் சொன்னால் எப்படி இருக்கும்?

இதெல்லாம் சாத்தியமா? சாத்தியம். அதைச் சாதிக்க கணினி மொழியியல் அவசியம். அதாவது, கணினிக்கு நமது தமிழ் மொழியின்



நா.தெய்வசுந்தரம்

இலக்கணத்தைச் சொல்லிக்கொடுக்க வேண்டும்.

இந்த அடிப்படையை உருவாக்காமல், மொழியின் பயன்பாட்டை, கணினி யுகத்தில் அதிகப்படுத்த முடியாது. இதைச் செய்யவே, தமிழ்க் கணினி மொழியியல் உயராய்வு மையத்தை சென்னைப் பல்கலைக் கழகத்தில் நிறுவ இருக்கிறார்கள். உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடைபெறும் இந்தச் சமயத்தில் தமிழ்க் கணினியின் அடிப்படை ஆய்வுக்கான இம்மையத்தைத் தொடங்க வேண்டும் என்ற தீர்மானத்தை உலகத் தமிழ் தகவல் தொழில்நுட்ப மன்றம் (உத்தமம்) நிறைவேற்றி யிருக்கிறது.

மத்திய மாநில அரசுகளின் கூட்டு நிதி உதவியுடன் தொடங்கப்பட விருக்கும் இம்மையத்தில், கணினி மொழியியல் ஆய்வுகளை மேற் கொள்ளுவதே முதல் பணி. உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் இதற்கான அச்சாரம் போடப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

"இந்த அடிப்படை ஆய்வு பணிகள் நடை பெற்று, முடிவுகளை வெளியிடுவது மட்டுமே எங்கள் நோக்கம். அதைப் பின்னர் தங்கள் சாப்டுவேர்களில் எந்த நிறுவனம் வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம். அதன் மூலம், ஒரே தரத்திலான சிறப்பான பிழைதிருத்தி கள், சந்தி திருத்திகள், இலக்கணத் திருத்திகள் புழக்கத்துக்கு வரும்" என்றார் டாக்டர் தெய்வசுந்தரம்.

- ஞானம்



# கம்ப்யூட்டருக்கு இலக்கணம் கற்றுத்தரப் போறோம்!

"All mothers are great but my mother is the greatest" என்று இருபது ஆண்டுகளுக்கு முன், சென்னையில் நடந்த தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்க மாநாட்டைத் தொடங்கி வைத்துப் பேசினார் இயக்குநர் பாலுமகேந்திரா.




''தாய்'' என்பதை 'மொழி' என்பதன் குறியீடாகவும் கொள்ள முடியும். எனில், 'எல்லா மொழிகளும் எழுந்து நின்று வணங்குவதற்குரிய தகுதியைப் பெற்ற மொழி எனது தாய் மொழி' என்று ஆகும். அவரவரும் அவரவர் தாயை, தாய்மொழியை இப்படிப் பொருத்திப் பார்த்துப் பூரித்துக் கொண்டாட உரிமை உண்டு.



தங்களது மொழிப்பற்றை, கலாசாரத்தின் விழுமியங்களைப் பாதுகாக்கும் பணியை, எந்த ஆராவாரமும் இன்றி, விளம்பரமு மின்றி ஓராண்டு, ஈராண்டல்ல - முன்னூற்றி அறுபத்தைந்து ஆண்டுகளாக செய்துவரும் ஒரு தெருவின் சனங்களைச் சமீபத்தில் சந்திக்க முடிந்தது.

'சாலியமங்களம்' என்றதும் வைகாசி சுவாதி நட்சத்திரத்தன்று நடைபெறும் 'பாகவத மேளா'தான் நினைவுக்கு வரும்.

முன்னூற்று அறுபத்தைந்து ஆண்டுகளா? சாத்தியமா? சாத்தியப்படுத்தி இருக்கிறார்கள் சாலியமங்களத்தின் அக்ரஹாரத்தை சார்ந்த தொன்னூறு குடும்பத்தினர்.

பதினேழாம் நூற்றாண்டின் தஞ்சையை, விசயநகர அரசர் அச்சுதப்ப நாயக்கர் வெற்றி கொள்கிறார். மன்னர், மந்திரிமார்கள் மற்றும் தம்மோடு

# பாகவத



**இரா.எட்வின்**

வந்திருக்கும் தமது உறவினர்களது சமயச் சடங்குகளை நிறைவேற்றவும், தமக்கு ஆலோசனைகள் வழங்கவும், தனது சொந்த நாட்டிலிருந்து தெலுங்கு பேசும் பிராமணர்களை அழைத்து வருகிறார். அவர்களை, 'சாலியமங்களம்', 'தேபெருமாநல்லூர்', 'ஊத்துக்காடு' மற்றும் சூலமங்களம் ஆகிய கிராமங்களில் அக்ரஹாரங்களை ஏற்படுத்திக் குடியமர்த்துகிறார். அவர்களுக்கு ஏராளமான விளைநிலங்களைத் தானமாக வழங்குகிறார்.

வெற்றியின் விளைவாகத் தம்மோடு தஞ்சை நாட்டில் குடியேறிய தனது குடிகள் இந்த மண்ணோடும் மக்களோடும் கலந்து, கரைந்து டையப் டையத் தமது மொழியை, கலாசாரத்தின் விழுமியங்களை மறந்து போவார்களோ என்ற அச்சம் மன்னருக்கு வருகிறது.

உடனே அவர்களை அழைத்துத் தமது கவலையை அவர்களிடம் பகிர்ந்து கொள்கிறார். தமது மொழியை, கலாசாரத்தின் வேர்களைப் பாதுகாக்க என்ன செய்யலாம் என்று ஆலோசிக்கிறார். 'ஏதாவது செய்யுங்கள்' என்று உத்தரவிடுகிறார்.

விளைவு, மேற்சொன்ன கிராமங்களிலும் பாகவத மேளாக்கள். இதில் சாலியமங்களம் தவிர, மற்ற ஊர்களில் இந்த மேளா நின்றுபோகிறது அல்லது தொடர்ச்சியற்று விட்டுவிட்டு நிகழ்த்தப்படுகின்றன. ஆனால், சாலியமங்களத்தில் மட்டும் விடாது 365 ஆண்டுகளாகத் தொடர்ந்து 'பாகவத மேளா' நடைபெற்று வருகிறது.

1645-ஆம் ஆண்டு முதல் பாகவத மேளா தொடர்ந்து நடப்பதற்கான ஆதாரங்கள் இருப்பதாக பக்த சமாஜத்தின்



# மேளா!

பொருளாளர் எஸ்.சி.வெங்கடகிருஷ்ணன் கூறுகிறார். அவரும், சென்னை ரயில்வேயில் உயர் அதிகாரியாகப் பணியாற்றும் சுப்பிரமணியனும் நிறையப் பகிர்ந்து கொண்டார்கள்.

''பாகவத மேளாவில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நாடகம். ஒரு நாள் 'சீதா கல்யாணம்' ஒரு நாள் 'ருக்மணி கல்யாணம்' ஒரு நாள் 'ருக் மாங்கதா',

ஒரு நாள் 'சீதா கல்யாணம்', ஒரு நாள் 'ருக்மணி கல்யாணம்', ஒரு நாள் 'ருக் மாங்கதா', ஒரு நாள் 'பிரகலாத சரித்திரம்' என்று கடந்த காலங்களில் அமர்க்களப்பட்டிருக்கிறது.



ஒரு நாள் 'பிரகலாத சரித்திரம்' என்று கடந்த காலங்களில் அமர்க்களப்பட்டிருக்கிறது. அந்தத் தெருவின் சனங்கள்தாம் நடிப்பதும் பார்ப்பதும். நரசிம்ம அவதாரம் பூண்டு இறைவன் இரணியனை வதம் செய்யும் காட்சியைக் காண மொத்த ஊரும் திரண்டு விடுமாம்.

ஏறத்தாழ தொண்ணூறு குடும்பங்களில் இருந்தும் பலர் வெளியூர்களிலும் வெளிநாடுகளிலும் இருக்கிறார்கள். எவர் எங்கு இருப்பினும், என்ன செலவேயாயினும் அனைவரும் அந்தப் பாகவத மேளா நடக்கும் காலத்தில் வந்துவிடுகின்றனர்.

இப்போது நாடகங்களைக் கொஞ்சம் குறைத்திருக்கிறார்கள். இளந்தலைமுறையினருக்குத் தெலுங்கு எழுதப் படிக்கத் தெரியாததே காரணம் என்பதைக் கவலையோடு பகிர்ந்து கொள்கிறார்கள்.

''இங்க நாங்க குடியேறியபோது, எல்லாக் குடும்பத்துச் சனங்களுக்கும் தெலுங்கு எழுதப் படிக்க, பேசத் தெரிந்திருந்தது. இப்போது ஒன்றிரண்டு குடும்பத்து இளைய தலைமுறை தவிர, ஏனையோருக்கு இது இயலாததாகி உள்ளது. நாங்கள் எங்கள் மொழியை, கலாசாரத்தை என்ன செய்தேனும் காப்பாற்ற வேண்டும் என்ற கவலை கலந்த அக்கறை எங்களுக்கு'' என வேதனையோடு சொல்கிறார் வெங்கடகிருஷ்ணன். பாகவத மேளாவில் கூடும் பெரியவர்கள் இது குறித்து ஆலோசித்து வருவதாகவும் சொல்கிறார்.

பாகவத மேளாவில் இருக்கும் பக்தியை மட்டுமே நாம் கண்டிருக்கிறோம். நாயக்க மன்னரோடு புலம் பெயர்ந்த ஒரு நூறு குடும்பத்தினரின் மொழி மற்றும் கலாசார விழுமியங்களைக் காப்பாற்றத் துடிக்கும் கவலை கலந்த அக்கறையை எடுத்துக் கொள்ளத் தவறியிருக்கிறோம்.

படாத பாடுபட்டு, வருடா வருடம் இங்கு கூடுவது, பக்தியோடு சேர்ந்து தங்களது மொழி மற்றும் கலாசார வேர்களைத் தரிசிக்கவும், அதனைக் காக்க வேண்டிய தங்களது பொறுப்புணர்வினைப் புதுப்பித்துக் கொண்டு போகவும் சேர்த்துதான்.

அருள்வாக்கு

# நிறைவு!



'வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது' என்ற வார்த்தை இப்போது ரொம்பவும் அடிபடுகிறது. சர்க்கார் திட்டங்கள் இதற்குத்தான் என்கிறார்கள். எல்லோருக்கும் வயிறு நிரம்பச் சாப்பாடு, மானத்தையும், குளிர் வெயிலையும் காப்பாற்றப் போதுமான வஸ்திரம், வசிப்பதற்கு ஒரு சின்ன ஜாகை இருக்கவேண்டியதுதான். இதற்கே சர்க்கார் திட்டம் போட வேண்டும். இதற்கு அதிகமாகப் பொருளைத் தேடிப் போவதால் வாழ்க்கைத்தரம் உயர்ந்துவிடாது.

ஒருத்தன் பீரோ நிறைய துணி வைத்திருந்தாலோ, கண்ட வேளையில் ஹோட்டலுக்குப் போய் கண்டதைத் தின்பதாலோ, வீட்டை ஏர் - கண்டிஷன் செய்து கொண்டு விட்டதாலோ, அவனுடைய வாழ்க்கை தரமாகிவிடாது. மனம் நிறைந்திருந்தால் அதுவே வாழ்க்கைத்தர உயர்வாகும்!

மனநிறைவு வெளி வஸ்துக்களால் ஒரு நாளும் கிடைக்காது. வெளி வஸ்துக்களைச் சேர்க்க சேர்க்க, மேலும் மேலும் சௌகரியத்துக்கு ஆசைப்பட்டுக் கொண்டு, புதுப்புது வஸ்துக்களைக் கண்டுபிடித்து வாங்கிக் கொண்டேதான் இருப்போம். நாம் இப்படி இருப்பதைப் பார்த்து, வசதியில்லாதவர்களுக்கும் இதே ஆசை வெறியை உண்டாக்கி விடுகிறோம். இதனால் போட்டி, சண்டை எல்லாம் உண்டாகின்றன. வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதாக ஏக முஸ்தீபுடன் இறங்கிய பின்தான், சகலருக்கும் எப்போது பார்த்தாலும், எதையாவது வாங்கிக் கொண்டயிருக்க வேண்டியிருக்கிறது. நமக்கு அது வேண்டும், இது வேண்டும் என்று சதா அரிப்பு இருக்கிற வரையில், நாம் தரித்திரர்கள்தான். இப்போது கோடீசுவரனிலிருந்து எல்லோருக்கும் இந்தக் குறை இருப்பதால், எல்லோருமே தரித்திரர்களாகத்தான் ஆகியிருக்கிறோம். பணம் இல்லாவிட்டால்தான் தரித்திரம் என்பதில்லை. பணம் அதிகமாகிவிட்டதாலேயே, எல்லோரும் தரித்திரர்களாகியிருக்கிறோம்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

ஹைகோர்ட்டில் அட்வகேட்டின் சேம்பரைக் கண்டுபிடித்து அவரிடம் பேசுவதற்கே மனோகருக்கு பதினொன்றரைக்கு மேலாகிவிட்டது. அதற்குள் அவருடைய ஜூனியர், கோர்ட்டில் அவரை எதிர்பார்ப்பதாகக் கூறி அழைத்துச் சென்று விட்டார். என்னென்ன தஸ்தாவேஜுகள் தேவைப்படும் என்று அவரிடம் பேச வேண்டியதிருந்தது. இனி மேல் சீனியர் அட்வகேட் சேம்பருக்கு வர இரண்டு மணி ஆகும். வரிசையாக இருந்த அறைகளுக்குள் அட்வகேட்களும், கட்சிக்காரர்களும் வருவதும் போவதுமாக இருந்தனர். மாடியை விட்டுக் கீழே இறங்கினான். வெயில் கடுமையாக இருந்தது. ஒரு புங்க மர நிழலில் போய் நின்று கொண்டான். இரண்டு புறமும் ஏகப்பட்ட கார்கள் நிறுத்தப்பட்டிருந்தன. எங்கே பார்த்தாலும் கருப்புக் கௌன்கள். ஒரே ஜனசந்தடி.

வெயிலுக்குக் குளிர்ச்சியாக எதையாவது குடிக்கலாம் போலிருந்தது. ஹைகோர்ட் வளாகத்தினுள் ஆவின் பாலகம்தான் இருந்தது. சர்பத்தோ, கூல்டிரிங்கோ குடிக்க வேண்டுமென்றால், கோர்ட் காம்பவுண்டுக்கு வெளியே சாலையைக் கடந்துதான் செல்ல வேண்டும். மேல்பட்டனை அவிழ்த்துவிட்டு சட்டைக் காலரைப் பின்பக்கம் தூக்கி விட்டுக் கொண்டான். இரண்டு மணி வரை என்ன செய்வதென்று தெரியவில்லை. அக்காவை ஆபீஸில் போய்ப் பார்க்கலாமா



**வண்ணநிலவன்**



என்று நினைத்தான். காலையில் அவனுக்கும் சேர்த்து மத்தியானச் சாப்பாடு எடுத்து வைக்கட்டுமா என்று அக்கா கேட்டபோது, அக்காவிடம் வேண்டாமென்று சொல்லியிருந்தது ஞாபகத்துக்கு வந்தது. பாரீஸ் கார்னரிலேயே எங்காவது ஹோட்டலில் சாப்பிட்டுக் கொள்ளலாம் என்று நினைத்தான்.

ஆனால், அக்கா ஏதோ பேச வேண்டும் என்றாளே? காலையில் அவளை டைக்கில் அழைத்துச் செல்வதற்காக அத்தான் காத் திருந்தபோது, அத்தானுடன் பைக்கில் போகா மல், அவன் கையைப் பிடித்து இழுத்து ஆட்டோ ஸ்டாண்டுக்கு அழைத்து வந்தாளே? அத்தானுக்கும் அக்காவுக்கும் இடையே என்ன? அதன் பிறகு அத்தானின் மனம் என்ன பாடுபட்டிருக்கும்? காலையில் அத்தானிடம் அக்கா முகம் கொடுத்துப் பேசிய மாதிரி தெரியவில்லையே? வெளியே அடித்த வெயிலின் வெக்கை மாதிரி, அவனுடைய மனமும் புழுங்கித் தவித்தது. அத்தானுக்கு போன் போட்டுப் பேசலாமா என்று யோசித்தான். கையில் எடுத்து வந்திருந்த ஆஃபீஸ் தஸ்தாவேஜ்கள் அடங்கிய

# உள்ளும் புறமும்





> **''கழுதை தேய்ந்து கட்டெறும்பானா என்ன ஆகும்?''**
>
> **''உதைக்கிறதுக்குப் பதிலா கடிக்கும்.''**
>
> **- சரஸ்ராம்**

பையை மரத்தடியில் கீழே வைத்துவிட்டு, சட்டைப் பையிலிருந்து மொபைலை எடுத்து, கிருஷ்ணபாரதி நம்பருக்குப் போட்டான். கிருஷ்ணபாரதி அவன் பெயரைப் பார்த்துவிட்டு, ''சொல்லு மனோ...'' என்றான். எப்படிக் கேட்பது என்று ஒரு க்ஷணம் யோசித்தான் மனோகர். என்றாலும் பேச ஆரம்பித்தான்.

''ஆபீஸுக்கு எப்போ வந்து சேர்ந்தீங்க அத்தான்...?'' என்று கேட்டான்.

''ஏன்...? வழக்கம் போல டயத்துக்கு வந்துட்டேன் மனோ... நீ வந்த வேலை என்னாச்சு?''

''லாயர் கோர்ட்டுக்குப் போயிருக்கார் அத்தான்... காலையிலே ஏன் அக்கா ஒங்க கூட பைக்கிலே வராம என்னைக் கூட்டிக்கிட்டு ஆட்டோவிலே வந்தா...?''

''அதை நீ உன் அக்காகிட்டே இல்லே கேட்டிருக்கணும்? அவளுக்கு இப்படித்தான் திடீர் திடீர்னு மூடு அவுட் ஆயிரும்.''

''இல்லே உங்க ரெண்டு பேருக்கும் மத்தியிலே ஏதாவது பிரச்னையா அத்தான்...?''

ஒரு க்ஷணத்துக்கு மறு முனையிலிருந்து பதில் வரத் தாமதமானது. பிறகு சமாளித்துக் கொண்டு கிருஷ்ணபாரதி பேசினான்.

''ஒண்ணுமே இல்லைன்னும் சொல்ல முடியாது. ஏதோ இருக்குன்னும் சொல்ல முடியாது. இப்ப கொஞ்ச நாளா அவளுக்கு ஏதேதோ தோணுது. என்னன்னு சொல்றது...''

இதற்கு மேல் அதைத் தோண்டித் துருவிக் கேட்பதற்கு அவனுக்குச் சங்கோஜமாக இருந்தது. ''இல்லே... சும்மாதான் கேட்டேன்...'' என்றான் மனோகர்.

''மத்தியானம் எங்கே சாப்பிடப் போறே? வேணும்னா எங்க ஆபீஸுக்கு வாயேன்... இங்கே கேண்டீன்லேயே சாப்பிட்டுக்கிடலாம்'' என்றான் கிருஷ்ணபாரதி.

''இல்ல அத்தான்... இங்கேயே சாப்பிட்டுக்கிடுதேன். அப்பத்தான் அட்வகேட்டைப் பார்க்க வசதியா இருக்கும் அத்தான்...''

''சரி, உன் இஷ்டம்...''

''சாயந்திரம் பார்ப்போம் அத்தான்...''

''சரி...''

மொபைலை ஆஃப் செய்து சட்டைப் பையினுள் போட்டான். பையை எடுத்துக்கொண்டு ஏதாவது குளிர்பானம் சாப்பிடலாமென்று நடந்தான். கிருஷ்ணபாரதிக்கும் அந்த விஷயத்தை மனோகருடன் விரிவாகப் பேச விருப்பமில்லை. மீண்டும் அவன் தன் அலுவலக வேலைகளில் மூழ்கினான். காலையில் நடந்த சம்பவத்தை மறக்கவே விரும்பினான். நேற்று சுசீலா வீட்டுக்கு வந்ததிலிருந்தே மனோகரி அவனிடம் சரியாகப் பேசவில்லை. சுசீலா விஷயத்தில் அவன் நாகரீகமாகவும் பண்பாட்டுடனும் நடந்து கொள்ள ஆசைப்பட்டான். ஆனால் மனோகரியின் மனத்தில் அதற்கெல்லாம்

இடமே இருக்கிற மாதிரி தெரியவில்லை. படிப்பறிவில்லாத, பாமரத்தனமான கிராமத்துப் பெண்ணின் இயல்புதான் அவனிடம் சுசிலா விஷயத்தில் வெளிப்படுகிறது. ஒருவேளை, மூர்த்தி சொல்கிற மாதிரி பெண்களே இப்படித்தானோ? சுசிலாவிடம் கூட ஒருவிதமான பொஸஸிவ்னஸ் இருக்கிறது. ஆனால், அது ரொம்ப நாசூக்காக வெளிப்படுகிறது.

பிற பெண்களிடம் கிருஷ்ணமூர்த்தி பேசினால் அதை மனோகரி வெறுக்கிற மாதிரியே, சுசிலாவும் பல சந்தர்ப்பங்களில் வெறுக்கிறாள் என்பதைக் கிருஷ்ணமூர்த்தி உணர்ந்திருக்கிறான். அன்று பிரேமாவுடன் அவன் பேச முயற்சிக்கிறபோதெல்லாம் சுசிலாவே அவசர அவசரமாகப் பதில் சொன்னது அவளுடைய பொஸஸிவ்னஸ்ஸைத்தான் காட்டுகிறது என்று தோன்றியது. உரிமை எடுத்துக்கொண்டு வருணைப் பார்ப்பதற்காக வீட்டுக்கு வந்ததெல்லாம் சற்று அதிகப்படியானதுதான் என்று நினைத்தான். ஆனால் மூர்த்தி முரட்டுத்தனமாகப் 'பெண்களே இப்படித்தான்' என்று தூர ஒதுக்குகிற மாதிரி அவனால் ஒதுக்க முடியவில்லை. அது அவனுடைய பலமா அல்லது பலவீனமா என்பது அவனுக்கே புரியவில்லை.

**ம**னோகர் சரவண பவனிலேயே சாப்பிட்டான். இரண்டரை மணிக்கு மேல் அட்வகேட்டைச் சந்திக்கத் திரும்பவும் சேம்பர் அறைக்குப் போனான். அட்வகேட் பொன்னம்பலமும் சாப்பிட்டுவிட்டு வந்து உட்கார்ந்திருந்தார். கட்சிக்காரர்கள் ஒவ்வொருவராக அவரைச் சந்திப்பதும் செல்வதுமாக இருந்தனர். மனோகருடைய முறை வரும்போது மூன்றரை மணிக்கு மேல் ஆகிவிட்டது. அவனிடம் சில விவரங்களைக் கேட்டார். சில தஸ்தாவேஜ்களைப் பார்வையிட்டார். அடுத்த மாதம் ஆர்க்யூமெண்ட்டுக்கு கேஸ் வந்துவிடும் என்றார். சில பத்திரங்களை ஜெராக்ஸ் எடுக்க வேண்டியதிருந்தது. ஜெராக்ஸ் எடுத்து அவற்றை ஜூனியரிடம் கொடுத்து விட்டுப் போகச் சொன்னார். அவற்றை ஜெராக்ஸ் எடுக்கக் கடையைத் தேடி அலைந்தான். ஜூனியர் சொன்ன கடையை அவனால் தேடிக் கண்டுபிடிக்க முடியவில்லை. கொஞ்சம் கூட வெயில் குறையவில்லை. எப்படியோ நகல்களை எடுத்து அவரிடம் ஒப்படைத்துவிட்டு வெளியே வந்தான். இன்னும் சில கட்சிக்காரர்கள் பொன்னம்பலத்தைப் பார்ப்பதற்காகக் காத்திருந்தனர். இனி அக்கா ஆபிஸுக்குப் போக வேண்டியதுதான். பஸ்ஸிலேயே நுங்கம்பாக்கம் போய்விடலாம் என்று தோன்றியது. அக்கா அவனிடம் என்ன



**"ரெண்டு கையையும் நீட்டவோ, மடக்கவோ முடியலை..."**

**"ஏன் சிரமப்படுறீங்க? நானே உங்க பாண்ட் பாக்கெட்டில் கையை விட்டு ஃபீஸை எடுத்துக்க மாட்டேனா?"**

**- எம்.மிக்கேல்ராஜ்**

பேசப் போகிறாள் என்று தெரியவில்லை.

ஸ்டெர்லிங்க் ரோடு பஸ் ஸ்டாப்பில் இறங்கி மனோகரியின் அலுவலகத்துக்குச் சென்றான். இரண்டு வருடங்களுக்கு முன் அந்த ஆபீஸுக்கு வந்திருக்கிறான். நுழை வாயிலருகே இடதுபுறம் இருந்த ரிஸப்ஷன் வலது பக்கத்துக்கு மாறியிருந்தது. ரிஸப்ஷனிஸ்ட்டிடம் சொல்லிவிட்டு சோபாவில் உட்கார்ந்தான். எதிரே இருந்த டீப்பாயில் கிடந்த தினசரியைப் புரட்டினான்.

மனோகரி தன்னுடன் லெட்சுமியையும் அழைத்து வந்தாள். லெட்சுமியை




அவனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள். "ஏதாவது சாப்பிடுறியா?" என்று கேட்டாள். "வேண்டாம் அக்கா..." என்றான்.

"சரி... கொஞ்சம் இரு. இதோ பெர்மிஷன் கேட்டுட்டு வந்திடுறேன்..." என்று சொல்லிவிட்டுச் சென்றாள்.

சிறிது நேரத்தில் இருவரும் ஆபீஸை விட்டுப் படியிறங்கினார்கள். மனோகரி மெரீனாவுக்கே போகலாம் என்று நினைத்தாள். ஒரு ஆட்டோவைப் பேசி மனோகரையும் ஏற்றிக் கொண்டாள். ஆட்டோவில் செல்லும்போது மனோகர் ஒன்றுமே பேசவில்லை. வேடிக்கை பார்த்துக் கொண்டே வந்தான். மனோகரியும் எதுவும் பேசவில்லை. ஐ.ஜி.ஆபீஸுக்கு எதிரே இறங்கிக் கொண்டு இருவரும் மணலில் இறங்கி நடக்க ஆரம்பித்தனர். கடல் காற்று விட்டு விட்டு வீசிக் கொண்டிருந்தது. மணற்பரப்பில் நடுப்பகுதியில் மனோகரி உட்கார்ந்தாள். அவனும் உட்கார்ந்தான்.

"அக்கா... வீட்டிலே வருண் என்ன பண்றானோ?" என்றான் மனோகர்.

"கொஞ்ச நேரம் இருந்துட்டுப் போயிடலாம்டா. எனக்கு உன்கிட்டே கொஞ்சம் பேசணும் போல இருக்கு. சீக்கிரமாவே கௌம்பிரலாம்."

"என்ன விஷயம் அக்கா...?"

எதிரே தெரிந்த கடலையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு மெதுவாகப் பேச ஆரம்பித்தாள்.

"எனக்குத் திருநெல்வேலிக்கே போயிரலாம்னு தோணுதுடா..."

"அப்பமன்னா?"

"திருநெல்வேலியிலேயே வந்து நிரந்தரமாத் தங்கிரணும்னு தோணுது."

"என்னக்கா இப்படிச் சொல்றே? அத்தான் என்ன சொல்றாங்க...?" என்று கேட்டான்.

"அவங்க என்ன சொல்லக் கெடக்கு? எனக்கு இங்கே இருக்கப் பிடிக்கலை."

"எல்லோருமே திருநெல்வேலிக்கு வந்து விடுகிற மாதிரியா? அங்கே வந்து என்ன பண்றது? ஒனக்கும் அத்தானுக்கும் இங்கேதானே வேலை, குடும்பம், பிள்ளைகள் எல்லாம் இருக்கு? எல்லாத்தையும் விட்டுட்டு நீ மட்டுமா தனியா அங்கே இருக்கப் போறே...?" அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"பிள்ளைகளை மட்டும் அழைச்சிட்டு வந்து இருக்கலாம்னு நெனைக்கிறேன்...?"

"அப்போ அத்தான்?"

"இனிமே அவங்களோட குடித்தனம் நடத்த முடியும்னு தோணலை" என்றாள். அவள் முகத்தையே மனோகர் பார்த்துக் கொண்டிருந்தான்.

**(தொடரும்)**

## கல்வெட்டுகள்

# வித்தியாசமான ஒரு கடிதம்!

ரெங்கமணி கிருஷ்ணசாமி என்கிற ஒரு வாசகர் துயருற்றிருந்த நிலையில், கல்கி அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்த வாசகருக்கு ஆறுதல் சொல்லி கல்கி எழுதிய கடிதம் இது.

கல்கி அமரரான 1954ஆம் ஆண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்ட கடிதம் இது. அதே ஆண்டில், உற்ற துணைவரான ரஸிகமணி மறைவு. 'பொன்னியின் செல்வன்' நெடுங்கதையின் இறுதிப் பகுதியில் மணிமேகலையின் மறைவு, புதிய தொடர்கதை 'அமரதாரா'வின் தொடக்க அத்தியாயங்களில், இந்து மதியின் தந்தை மந்திரமூர்த்தியின் பக்தியைப் பற்றிய சிந்தனைகள் - எல்லாவற்றோடும் தொடர்புடையதாய் இந்த ஆறுதல் மொழிகள் அமைந்துள்ளன.

அடையாறு
3.1.1954

நமஸ்காரம்.

தங்கள் கடிதத்தைப் படித்து மனம் உருகும்படி நேர்ந்தது. உலகில் நேரக்கூடிய துயரங்களில், அன்புக்குரியவர்களைப் பிரிவதைக் காட்டிலும் பெரிய துயரம் என்ன இருக்க முடியும்? ஆயினும் ஆத்மா அழிவற்றது என்பது நம் நம்பிக்கை. அன்பு 'அமரத்துவம்' வாய்ந்தது. ஆதலின் அன்புக்குரியவர்களை என்றும் நாம் பிரிவதில்லை.

வெளியில் காண முடியாவிட்டால், உள்ளத்தினுள்ளே காணுகிறோம். அபிமன்யுவைப் பிரிந்த பிறகும், அவனுடைய அருமை மனைவியும் பெற்றோர்களும் உயிர்வாழ்ந்திருந்தார்கள். காரணம், மேற்கூறிய நம்பிக்கைதான். எல்லாம் வல்ல இறைவன் தங்களுக்கு மனநிம்மதி அருளுமாறு பிரார்த்திக்கிறேன். வேறு என்ன நான் செய்ய இயலும்?

கள்வனின் காதலி, மோகினித் தீவு முதலிய கதைகள் தங்களுக்குப் பிடித்திருக்கின்றன என்பதை அறிந்து திருப்தி கொள்கிறேன்.

இங்ஙனம்
ரா.கிருஷ்ணமூர்த்தி



அமரர் கல்கி

# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்




**மேஷம்:** நீண்ட தூரப் பிரயாணம் வந்து சேரும். உத்தியோக இடம் மாறுதல் உண்டாகும். கடன் தொல்லை தீரும். மனதைரியமும், தன்னம்பிக்கையும் மிகுந்து காணப்படும். குடும்ப வாழ்க்கை நன்றாக இருக்கும். தரும காரியங்கள் நிறைவேறும். மொத்தத்தில் சுபிட்சமான வாரம்.

**ரிஷபம்:** வாக்குவன்மை மேலோங்கும். வரவேண்டிய நிலுவைகள் வந்து சேரும். தடைபட்டு வந்த திருமணத் தடை விலகிக் கைகூடும். கூட்டாளிகள் விட்டு விலகிச் செல்ல நேரிடும். பணவரவு காத்திருக்கிறது. வியாபாரத்தில் நல்ல வருவாய் கிடைக்கும். கடன் சுமை தீரும். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். மொத்தத்தில் நல்லவை நடக்கும் வாரம்.

**மிதுனம்:** உத்தியோகத்தில் பதவி உயர்வு வரும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். சுபகாரியப் பேச்சு வார்த்தை பலன் அளிக்கும். வியாபாரத்தில் வெற்றியுண்டு. குடும்பத்தில் புண்ணிய காரியம் நடக்கும். கடல் கடந்த மனிதருடன் அறிமுகம் ஆகும். மொத்தத்தில் சுகமான வாரம்.

**கடகம்:** திடீர்ப் பிரயாணம் மேற்கொள்ள நேரிடும். நீண்ட கால வழக்கு முடிவுக்கு வரும். பணக்கஷ்டம் இருக்காது. எதிரிகள் சரண் அடைவார்கள். கடன் தொல்லை தீரும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். கடவுளின் அனுகிரஹம் கிட்டும். மொத்

த்தில் மகிழ்ச்சி நிறைந்த வாரம்.

**சிம்மம்:** உடல்நிலையில் தொல்லைகள் ஏற்பட்டு விலகும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் ஏற்படும். யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். கடன் பிரச்னை அதிகரிக்கும். கூட்டாளிகள் பிரிய நேரிடும். வீடு மாற்றம் உண்டாகும். மறைமுக விரோதிகளின் தொல்லை உண்டு. மொத்தத்தில் எச்சரிக்கையோடு செயல்பட வேண்டிய வாரம்.

**கன்னி:** பணப்பிரச்னை தீரும். வீடு மாற்றம் உண்டாகும். கடன் பிரச்னை விலகும். வரவேண்டிய நிலுவைகள் வந்து சேரும். வாகனம் வாங்கும் வாய்ப்புகள் உண்டு. சத்ருக்கள் பயம் விலகும். குடும்ப வாழ்வில் இருந்து வந்த குழப்பம் நீங்கிச் சுமுக நிலை ஏற்படும். மொத்தத்தில் பிரச்னைகள் விலகி, நன்மைகள் ஏற்படும் வாரம்.

**துலாம்:** சத்ரு தொல்லை அதிகமாகும். கடன் சுமையால் அவதிப்பட நேரிடும். வாக்குவாதம் தவிர்க்கவும். தேவை இல்லாத பணச்செலவு ஏற்படும். திடீர்ப் பயணம் வந்து சேரும். வீடு மாற்றம் ஏற்படும். வம்பு வழக்கு சற்றுத் தள்ளிப் போகும். வழக்கு வெற்றியளிக்கும். மொத்தத்தில் நன்மையும், தீமையும் ஆன பலன்கள் கலந்து வரும் வாரம்.

**விருச்சிகம்:** வாக்குவாதம் செய்வதைத் தவிர்க்கவும். வாகனங்களில் பயணம் செய்யும்போது எச்சரிக்கை தேவை. வேலைப்பளு கூடுதலாகும். கூட்டாளிகள் விலகிப் போவார்கள். நீண்ட காலம் தடைப்பட்டு வந்த காரியம் இனிது நிறைவேறும். புதிய தொழில் பலன் அளிக்கும். கடன் சுமையில் இருந்து விடுதலை கிட்டும். திடீர்ப் பயணம் உண்டு. மொத்தத்தில் எச்சரிக்கையாய் இருக்க வேண்டிய வாரம்.

**தனுசு:** உத்தியோகத்தில் பதவி உயர்வு, பண உயர்வு ஏற்படும். கடன் பிரச்னை தீரும். வீடு மாற்றம் உண்டாகும். சுபகாரியப் பேச்சு வார்த்தை பலன் அளிக்கும். வாகன வாய்ப்பு ஏற்படும். உறவினர், நட்பு வகையால் ஆதாயமுண்டு. எதிர்ப்புகள் விலகும். தொழில் வளர்ச்சி ஏற்பட வாய்ப்புகள் தேடி வரும். மொத்தத்தில் இனிமை தரும் வாரம்.

**மகரம்:** இனிமையான பயண வாய்ப்பு உண்டு. தந்தைவழி சொத்து வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கடன் சுமை தீரும். புதிய வீடு / மனை வாங்க ஏற்ற தருணமிது. வாகனம் வாங்கும் வாய்ப்பு வரும். பணக் கஷ்டம் தீரும். பொருள் வரவு உண்டு. மொத்தத்தில் மகிழ்ச்சிகரமான வாரம்.

**கும்பம்:** வரவேண்டிய பணம் வந்து சேரும். கடன் சுமை நீங்கி நிம்மதி கிட்டும். வம்பு வழக்குகள் முடிவுக்கு வரும். வீடு/மனை வாங்கப் புதிய முதலீடுகள் செய்ய நேரிடும். கூட்டாளிகள் விலகிப் போவார்கள். புதிய பொருள் சேர்க்கை உண்டாகும். சிலருக்கு இடமாறுதல் ஏற்படும். மொத்தத்தில் சந்தோஷமான வாரம்.

**மீனம்:** மனதை உறுத்திய பெரிய பாரம் குறைய ஆரம்பிக்கும். பணப் பிரச்னை தீரும். உத்தியோகத்தில் வருவாய் பெருகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். நீண்ட தூரப் பயணம் வந்து சேரும். மகான்கள் தரிசனம் கிட்டும். மொத்தத்தில் நற்பலன்கள் விளையும் வாரம்.



## ஆதவனை ஜாலமாக்கும் யவ்வனம்

உழுது பயிர்செய்தேன் உன் யவ்வனத்தை
நீர்க்கால்களின் ஓரத்து மரங்களெனத்
தளிர்க்கத் துவங்கியிருக்கிறது அது
ஆதவனின் கீற்றுகளைப் பிரித்து
ஜாலமாக்கும் அதனியல்பில் மயங்கி
வசிப்பிடமாக்கிக் கொண்டன
சில பறவைகள்
அவற்றின் பசியாற
மினுக்கட்டான்களை ஒத்த கனிகளால்
தம்மை அலங்கரித்துக் கொண்ட யவ்வனம்
அவ்வப்போது பறவையாகிச்
சுற்றி வரவும் செய்தபோது
அதற்கான கூட்டைத் தயார் செய்யத் துவங்கியது
என் சுந்தரவனம்

## குரலிழக்கும் வார்த்தைகள்

கொஞ்ச காலமாய் என் கூடவே
வசித்துவருகிறது நீ கண்டறியாத மௌனம்
மௌனம்தான் எனினும்
உனக்குச் சொல்லும் சம்மதமில்லை
மரணம் விதைக்கும் மௌனத்தைப் போன்று அது
துக்க நிறத்தைப் பூசிக் கொண்டதுமில்லை
மௌனம் உடைபடும் பின்னொரு சமயத்தில்
அதற்குள் கனலும் வெப்பத்தாலும்
வெடிக்கக் காத்திருக்கும் கேள்விகளாலும்
அதிரக்கூடும் உன் கள்ள மௌனம்
போராளியின் கடைசிக்குண்டைப் போல
பிரயோகமாகப் போகும் அம்மௌனம்
பருந்தை எதிர்த்தடிக்கும் தாய்க்கோழியெனத்
தோற்றம்கொள்ளக் காத்திருக்கிறது
அப்போதெழும் பேரோலத்தில்
உன் வார்த்தைகள் குரலிழந்து போகும்.

## கனவில் ஒலிக்க மறுக்கும் பாடல்

எம் நிலத்தின் பாடல்களால்தான்
தானியக் கிடங்குகள் நிறைந்தன
அதன் இசைத்துணுக்குகள்
வயிற்றில் படிந்தபோது
போதும் போதும் என்னுமளவுக்குப்
பசியின் நாவுகள் திளைப்புற்றன
அப்பாடல்களில் எம் பாட்டன்மார்களின்
களிப்பும் வியர்வையும் சேர்ந்தே இசைத்ததால்
அவற்றின்பால் நாங்கள் சுவீகாரமானோம்
எம் ஊழியத்தால் பண்பட்ட நிலத்தின் ராகத்தினால்
ரம்யமாய் உதித்தான் ஆதவன்
காற்றிலாடும் அதன் ஆலாபனைகளால்
சந்திரன் மயக்கம் தந்தது
நட்சத்திர எண்ணிக்கையில் மகசூல்
அடையவில்லையாயினும்
இருண்டுபோகவில்லை எமது இரவுகள்
எம் பெண்களின் கற்பைப் போல
பெலன் தந்த நிலத்தை
உம் அம்மோனியாவுக்கு அடகுவைத்த
பின்னிரவுகளிலிருந்து
கனவில் ஒலிக்க மறுக்கின்றன அப்பாடல்கள்

## பிழைப்பு

ஈரமற்றுக் கானல் ஓடும் நதியில்
மூர்ச்சையுற்று மிதந்த பால்யத்தைச்
சுமந்துவந்து கண்ணம்மாபேட்டையில்
எரிக்கையில் துளிர்க்கும் வியர்வையில்
சற்றே உப்புக் கரிக்கிறது பிழைப்பு

# கதிர்பாரதி கவிதைகள்



**டேஸ்டி டூர்**



புகைப்படத்துக்குப் போஸ் கொடுக்கும்போது 'சீஸ்' என்று சொன்னால் போட்டோவில் அழகாக விழுவோம் என்று போட்டோகிராபர் சொல்வதுண்டு. உதடு கள் விரிந்து ஒரு ஸ்மைல் எஃபெக்ட் இருக்கும். சீஸ் என்று சொன்னாலே ஸ்மைல் என்றால், கட்டிக் கட்டியாக சீஸைப் பார்த்தால் சிடு மூஞ்சிகளுக்குக் கூட களுக்கென்று சிரிப்பு வந்து விடுமே...

பிரெட், பரோட்டா, கேக், பிட்ஸா, பர்கர், பன்... என்று சீஸ் இல்லாத பொருளே கிடையாது.

சீஸ் என்ற ஒரு பொருளைக் கண்டு பிடித்தது ஒரு அரபு நாடோடி. பல நாட்கள் குதிரையில் பயணம் செய்யும்போது, உணவுப் பொருட்களைக் கட்டிச் சுமந்து போவதுண்டு. நாடோடி ஒரு தோல் பையில் பாலை எடுத்துப் போயிருக்கிறான். களைத்துப் போய்க் குடிக்கலாம் என்று பாலை எடுத்துப் பார்த்தால், திரிந்து போய்த் தண்ணீரும் தயிர்க் கட்டியுமாக இருந்திருக்கிறது. ஆனாலும் அந்தத் தண்ணீரின் சுவையும், மொத்தையாக இருந்த பாலும் நாடோடிக்குப் பிடித்துப் போக, சீஸ் செய்யும் வழக்கம் புழக்கத்தில் வந்து விட்டது. சுமார் 5000 பி.ஸி.யிலேயே சீஸைப் பற்றிய தகவல் இருக்கிறது. பால், வெண்ணெய், சீஸைப் பற்றிய விவரங்கள் நம் புராணத்திலும் காணப் படுகின்றன. (கிருஷ்ணர் சாப்பிடாத வெண்ணையா?)

அரபு நாட்டில் தோன்றினாலும், சீஸ் மிகப் பாப்புலரானது ஐரோப்பாவில். 13-ம் நூற்றாண்டிலேயே பால் பண்ணைகள் ஆரம்பித்து, அபார வளர்ச்சி கண்டது சீஸ் வியாபாரம்.

சீஸில் பல நூற்றுக்கணக்கான வெரைட்டி! பாலின் க்வாலிட்டி, பாலைத் திரிப்பதற்கு உபயோகப்படுத்தும் பாக்டீரியா, பாலிலிருக்கும் கொழுப்புச் சத்து, சீஸின் கனம்... இவையே என்ன வெரைட்டியான சீஸ் என்பதை நிர்ணயிக்கிறது.

வெஜிடேரியன் சீஸ் கூட உண்டு. பொதுவாகப் பாலைத் திரிப்பதற்கு உப யோகப்படுத்தும் 'ரென்னெட்' என்ற என்ஸய்மை கலக்க மாட்டார்கள். இந்த வெஜிடேரியன் சீஸில் ரென்னெட் மிருகத்தி லிருந்து கிடைப்பது. அதற்குப் பதிலாகத் தாவரங்களிலிருந்தும், பாக்டீரியாக்களிலிருந் தும் எடுத்து அந்த சீஸ் தயாரிப்பார்கள்.

# சீக்ரெட் அஃப் சீஸ்!



● உலகிலேயே மிக அதிகமாக சீஸ் தயாரிக்கப்படுவது அமெரிக்காவில்தான். ஆனால், சீஸை மிக அதிக அளவில் கபளீகரம் பண்ணுவது கிரேக்கர்களும் பிரான்சு நாட்டு மக்களுமே.

● ஒரு அழகான டின்னர் பார்ட்டியில் சீஸ் இல்லை என்றால், அது 'அழகான பெண். ஆனால் ஒற்றைக் கண்' என்பது போலிருக்கும் என்கிறார்கள் சீஸ் பக்தர்கள்.

● பிட்ஸா ஹட் என்ற சர்வதேசக் கம்பெனி, ஒரு வருடத்தில் சுமார் முந்நூறு மில்லியன் பவுண்ட் சீஸ் உபயோகப்படுத்துகிறது.

● மாக்கரோனி அண்ட் சீஸ்தான் நெ.1 பாப்புலர் ரெஸிப்பி... அமெரிக்காவில்.

● ஸ்விஸ் சாக்லேட் எப்படிப் பிரசித்தமோ, அதைவிட ஸ்விஸ் சீஸ் படு பாப்புலர். துளைகள் இருக்கும் சீஸைப் பார்த்து 'கண்' என்று சொல்வதுண்டு.

● பால் சாப்பிட்டால் பலருக்கு அலர்ஜி. அவர்கள் சீஸ் சாப்பிடலாம்.

● வைட்டமின்களும் மினரல்களும் ஏகமாக உண்டு சீஸில்! கால்ஷியம், வைட்டமின் ஏ, பி2, பி12... என்று சத்துக்கள் பல. பெண்கள் சீஸ் கண்டிப்பாகச் சாப்பிட வேண்டும். எலும்புத் தேய்மானத்திலிருந்து தப்பிக்கலாம்.

● பல வகையான சீஸில் கலோரிகள் ஏராளம். அதனால் கவனமாகச் சாப்பிடவும்.



## க்விக் ரெஸிப்பி

### ஈஸி சீஸ் பொடாட்டோ பூரி

தேவை:
உருளைக்கிழங்கு-3 (வேகவைத்து மசித்தது),
மைதா - ஒரு சின்ன கப்,
சீஸ் (துருவியது) - ½ கப்,
உப்பு - தேவையான அளவு,
பச்சை மிளகாய் - 2(அ)3, (பொடியாக நறுக்கியது).
கரம் மசாலா பவுடர்- ½ ஸ்பூன்

செய்முறை: மைதா, உருளை, சீஸ், உப்பு, மிளகாய், கரம் மசாலா எல்லாவற்றையும் சேர்த்து நன்றாகப் பிசையவும். தண்ணீரே விடக் கூடாது. நன்றாகப் பிசைந்த மாவைக் கொண்டு பூரிகளாக இடவும். பொரித்தெடுக்கவும். மிகச் சுவையான சீஸ் பூரி தயார்.

குறிப்பு: பச்சைக் கலர் வேண்டுமென்றால் நிறையக் கொத்துமல்லி அல்லது பாலக் சேர்க்கலாம்.

# அத்துமீறல்

## எத்திகல் ஹாக்கிங்

"எனக்கு ஒரு பெரிய உதவி செய்வீங்களா?"

"கோடீஸ்வரர் நீங்க. நகரத்திலேயே பெரிய நகைக்கடை அதிபர். தங்கமும் வைரமுமா நாலுமாடி அடுக்கி வச்சிருக்கீங்க. நான் போய் உங்களுக்கு உதவி?"

"கொஞ்சம் என் கடையை வந்து கொள்ளையடிங்க. நீங்க மாஜி திருடர் ஆச்சே!"

மரை கழண்ட கோடீஸ்வரர் என்று நினைத்தால் தப்பு. மனம் திருந்திய மாஜி திருடரைத் தம் கடையில் கொள்ளையடிக்க ஏற்பாடு செய்து, அதன் மூலம் கடைப் பாதுகாப்பில் என்ன குறை இருக்கிறது என்று கவனித்துப் பலப்படுத்துவதே அவர் திட்டம். இதையே கம்ப்யூட்டர் உலகில் செய்தால், அதுக்குப் பெயர் 'நல்லதே நினைத்து செய்கிற கம்ப்யூட்டர் அத்துமீறல்'. அதாவது 'எத்திக்கல் ஹாக்கிங்'.

தலைமை ஆபீஸ் கம்ப்யூட்டரை, வலைப்பின்னல் மூலம் கிளை அலுவலகக் கம்ப்யூட்டரோடு இணைப்பது, வீட்டுக் கம்ப்யூட்டரை இன்டர்நெட் மூலம் உலகத்தில் எங்கெங்கோ இருக்கிற நண்டு சிண்டு நார்த்தங்காய் கம்ப்யூட்டரோடு பேச வைப்பது, இதெல்லாம் அத்துமீறி உங்க கம்ப்யூட்டரை வேறு யாராவது பயன்படுத்த வழி செய்யும். அது மட்டுமில்லை இந்த ஹாக்கிங் சேமித்து வைத்த தகவலைத் தவறாகப் பயன்படுத்த, ஏன், அழித்தொழிக்கவும் வழிசெய்யும். தடுக்க வழி, எத்திக்கல் ஹாக்கிங் செய்ய வைத்து ஓட்டை உடைசலை அடைப்பதுதான்.

எத்திகல் ஹாக்கிங் ஆசாமியை வெள்ளைத் தொப்பிக்காரன் (ஒயிட் ஹாட்) என்று சொல்வார்கள். ஹாலிவுட் சினிமாவில், நல்ல மனசு ஹீரோ வெள்ளைத் தொப்பி போட்டு வருவதைப் பார்த்துப் பழகிய பழக்கதோஷம் இது. வெள்ளைத் தொப்பிக்காரனை வெற்றிலை பாக்கு வைத்து அழைத்து, 'இதான்டா நம்ம கம்ப்யூட்டர், இஷ்டம் போல உன்னோட கைவரிசை



யைக் காட்டி, இதுக்குள்ளே இருக்கற மென்பொருள், தகவலை எல்லாம் தொட முடியுமான்னு பாரு. என்ன செஞ் சேன்னு சொல்லு. உனக்கு கணிசமான ஒரு தொகையைக் கொடுத்திடறோம்.'

இப்படிக் கம்ப்யூட்டர் நிறுவனம் தந்த ஒப்புதலோடு, அத்துமீறல் ஆசாமி வேலையை ஆரம்பிப்பார். கம்பெனிக்காரங்களே கம்ப்யூட் டரின் படம் போட்டுப் பாகம் குறிச்சு, என்ன மாதிரி இணைப்பு, யார் யார் பயன் படுத்தறாங்கங்கிற தகவலைக் கொடுத் திட்டா, அதையெல்லாம் உள்வாங்கிட்டுச் செய்யறது 'வெள்ளைப் பெட்டி ஹாக்கிங்'. சும்மா கம்ப்யூட்டரைக் காட்டி 'புகுந்து விளையாடு'ன்னு விட்டா கற்பனையை முழுக்கப் பயன்படுத்திச் செய்யற அத்துமீறல் 'கருப்புப் பெட்டி ஹாக்கிங்'. இப்படி




உள்ளே நுழையற முயற்சியை 'ஊடுருவல் சோதனை' (penetration testing)ன்னு சொல்றது வழக்கம். நாரதர் கலகம் மாதிரி ரெண்டு வகை ஹாக்கிங்கும் நன்மையிலேயே முடியும். ஹாக் கிங்னாலே தகவலோ, மென்பொருளோ தவறுதலா அழிஞ்சு போகும்னு பயம் இருந்தா, முதல்லே அதைப் பிரதி எடுத்து இன்னொரு கம்ப்யூட்டர்லே தற்காலிகமாப் போட்டு வைக்கலாம்.

என்னதான் பாதுகாப்பாகக் கம்ப்யூட்டர் இருந்தாலும், பலவீனமான ஒரு அம்சம் உண்டு. அதை உபயோகிக்கறவங்கதான் அந்தப் பலவீனத்துக்குக் காரணம். உங்க கம்ப் யூட்டர்லே வேலை பார்க்க நீங்க தேர்ந்தெடுத்த கடவுச் சொல்லை (பாஸ்வேர்ட்) வேறே யாராவது தெரிஞ்சுக்கிட்டா, அதை வச்சே எல்லாத் தடையையும் மீறி, வெற்றிகரமாக உள்ளே புகுந்து ஸ்வாஹா பண்ணிடலாம். உங்க கிட்டே நைச்சியமாப் பேசிப் பழகி, மயக்கி, உங்க பாஸ்வேர்டை உளற வைக்கற கலைக்கு, சோஷியல் எஞ்ஜினியரிங் (சமூகப் பொறியியல்)ன்னு பேரு. எத்திக்கல் ஹாக்கர் ஊடுருவல் சோதனை செய்யறதோட, இப்படி சோஷியல் எஞ்ஜினியரிங் செய்து, நீங்க பாஸ்வேர்டை சொல்றீங்களான்னு பார்த்து, உங்க பாஸ்கிட்டே சொல்லிடலாம். புதுசா யாராவது அழகான இளம்பெண் ஹலோ சொன்னா, நல்ல மனசு ஹாக்கரா, நாச மனசு ஹாக்கரா, ச்சும்மா ஹலோவான்னு ஒரு விநாடி ஆராய்ந்து, ரெண்டு சென்டிமீட்டர் புன்னகை புரிவது சகலவிதத்திலும் நல்லது.

# பாடகி சுவி

கோலிவுட், பாலிவுட் எல்லா 'வுட்'லையும் லேட்டஸ்ட் 'ஹாட்' 'ராவணன்'. அந்தப் படத்தின் 'கெடா கெடா கறி' பாட்டு திக்குமுக்கெல்லாம் சூப்பர் ஹிட். அந்தப் பாடலைப் பாடிய சுவியுடன் ஒரு ஸ்வீட் சந்திப்பு...







**'சுவி'ன்னா என்ன?**

''நீங்க வேற அந்தப் பேருக்கு பின்னாடி ஒண்ணும் பெரிசா ஹிஸ்டரி, ஜாக்ரபி எல்லாம் கிடையாது. என்னோட உண்மையான பேர் ஸ்வேதா. என்னோட ஃபிரெண்ட்ஸ் எல்லாரும் என்னை ஸ்வேன்னுதான் கூப்பிடுவாங்க. அந்த ஸ்வேங்கற பேருதான் ஒரு சின்ன ஸ்பெல்லிங் மிஸ்டேக்ல சுவின்னு மாறிடுச்சு..''

**சினிமா பாட்டுக்குள்ள நீங்க எப்படி நுழைஞ்சீங்க, இல்ல, சினிமா பாட்டு உங்களுக்குள்ள எப்படி நுழைஞ்சுது?**

''எத்திராஜ்ல என்னோட பி. எஸ்.ஸி படிப்ப முடிச்சிட்டு, அமெரிக்கால போய் மேல படிக்கலாம்னு எக்ஸாம்லாம் எழுதிக் காத்துக்கிட்டு இருந்த சமயத்துல, நிறைய இசை அமைப்பாளர்கள்கிட்டேயிருந்து பாட்டுப் பாட சொல்லி அழைப்பு வந்தது. சரின்னு அப்படியே இசை வெள்ளத்துல மூழ்கி நீச்சல் அடிக்க ஆரம்பிச்சுட்டேன்.''

**உங்களோட முதல் சினிமா பாட்டு எது?**

'' 'சரோஜா' படத்துல வர்ற 'கோடானு கோடி.' நிஜமாவே கோடானு கோடி மக்கள்கிட்ட என் குரலைக் கொண்டு போய் சேர்த்த பாட்டு அது.''

**உங்க தாய் மொழி தமிழா?**

''அட, நான் அவ்வளவு அழகா தமிழ் பேச ஆரம்பிச்சுட்டேனா? என் தாய் மொழி, தந்தை மொழி எல்லாம் மலையாளம். நான் ரெண்டு மாசக் குழந்தையா இருக்கும் பொழுதே இந்த தமிழ் மண்ணுக்கு வந்துட்டேன், நான் ஹண்ட்ரட் பர்சண்ட் சென்னை பொண்ணு. ஆனா அவ்வளவா, தமிழ் பேசற வாய்ப்பு எனக்குக் கிடைக்கல. ஸ்கூல்ல கூலா இங்கிலீஷ்தான் பேசுவேன்.

# “பாய் ஃப்ரெண்ட்ஸ் வேஸ்ட்!”



“ராவணன் படத்துல
சூப்பர் டூப்பர் ஹிட்
பாடல் பாடியும்,
ஆடியோ கேஸட்டுல
என் பேர் இல்லாதது
எனக்குப் பெருத்த
ஏமாற்றம்”

போன வருஷம் நீங்க என்னைப் பேட்டி எடுக்க வந்திருந்தீங்கன்னா, அப்படியே ஓடிப் போயிருப்பீங்க. போன வருஷம் வரைக்கும், 'தங்லீஷ் மொழிலா தான் நான் சொதப்பிக்கிட்டு இருந்தேன் (தமிழ்+ மலையாளம் + இங்கலீஷ்).. இப்போ நல்லா தமிழ் பேசக் கத்துக்கிட்டேன்.''



**உங்கள பொறாமைப் பட வைத்த விஷயம் ஏதாவது இருக்கா?**

''பாடகர் பென்னி கூட ஒரு மியூசிக் ஆல்பம் பண்ணுவதற்காக கேரளா பக்கம் போயிருந்தேன். அங்க ஹவுஸ் போட்ல பாட்டு ஷூட்டிங் நடந்தது. இக்கரையிலேர்ந்து அக்கரைக்கு வரைக்கும் அக்கறையோட ஏகப்பட்ட மக்கள், 'பென்னி, பென்னி'ன்னு கூப்டுக்கிட்டே இருந்தாங்க. அட, எங்க போனாலும் பென்னிய எல்லாருக்கும் தெரியுதேன்னு நினைச்சுக்கிட்டேன்.''

**உங்களை ஏமாற்றம் அடைய செஞ்ச விஷயம்?**

''அதை ஏன் கேட்கறீங்க, சூப்பர் டூப்பர் ஏமாற்றம், சமீபத்துல வெளிவந்த 'ராவணன்'படத்தோட ஆடியோ சிடில என் பேரே இல்லீங்க.. ரொம்பவே வருத்தம் ப்ளஸ் ஏமாற்றம் கொடுத்த விஷயம் அதுதான்.''

**சமீபத்திய சந்தோஷம்?**

'''ராவணன்' படத்துல ஐஸ்வர்யா ராய் வரும் பொழுதெல்லாம் பின்னாடி பேக்ரவுண்டு ஸ்கோர்ல என் குரல்தான் ஒலிக்குது.. அது ரொம்ப ரொம்ப சந்தோஷமான விஷயம்.''

**நிறைய பாய்ஸ், ஃபிரெண்ட்ஸ்ன்னு இருப்பீங்களா சுவி?**

''ஃபிரெண்ட்ஸ்னா எல்லாமே ஃப்ரெண்டீஸ்தான். நோ பாய் ஃபிரெண்ட்ஸ். அது ஒரு வேஸ்ட் ஆஃப் டைம். பாய் ஃபிரெண்ட்ஸ் வெச்சுகிட்டா அவங்க சொல்றபடி எல்லாம் கேட்கணும். நிம்மதியா நான் உண்டு என் பாட்டு உண்டுன்னு இருக்க முடியாது.''

**அழகா இருக்கீங்க, சினிமால நடிக்கலாமே?**

''சில டைரக்டர்ஸ் சினிமால நடிக்கச் சொல்லிக் கேட்டாங்க.. இன்னும் எனக்குத் தைரியம் வரலை. எனக்கு ஏத்தா மாதிரி நானே பாடி, நடிக்கறா மாதிரி ஒரு வாய்ப்பு வந்தா நிச்சயம் நடிப்பேன்.''

தமிழ் சினிமாவுக்குச் சீக்கிரமே ஒரு நல்லா பாட்டுப் பாடத் தெரிஞ்ச ஹீரோயின் ரெடியாயிட்டாங்கடோய்...

**- நளினிசம்பத்குமார்**

நாற்பது ஆண்டுகளாகப் புறக்கணிக்கப்பட்ட நிலங்களை, ஒன்பது மாதங்களில் பக்குவப்படுத்தி விளைநிலங்களாக மாற்றிக் காட்டி, விளைச்சல் எடுக்க முடியும் என்று நிரூபித்துக் காட்டியுள்ளது வானகம்.

கானகம் கேள்விப்பட்டிருக்கோம். இதென்ன வானகம்? முப்பது ஆண்டு களாக, மரபுசார்ந்த இயற்கை விவசாயப் பிரசாரத்தில் இயங்கி வரும், வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வாரின் சிந்தனை வெளிச்சம்தான் வானகம்.

கரூர் மாவட்டம், கடவூர் ஊராட்சியின் கருமாண்பட்டி கிராமம் அருகே, நாற்புறமும் மலைகள் சூழ்ந்த நடுவெளிப் பிரதேசத்தில் ஐம்பது ஏக்கர் பரப்பளவில் முகிழ்த்துள்ளது வானகம். ''ஐம்பது ஏக்கரில் - சீர்திருத்தப்பட்ட பத்து ஏக்கரில், சென்ற ஆண்டு கம்பு, சோளம், தினை ஆகியன பயிரிட்டு, அதிகபட்ச மகசூல் எடுக்கப்பட்டுள்ளது!'' எனக் கூறும் கோவில்பட்டி, அரசு மண் பரிசோதனை நிலைய வேளாண் அலுவலர் செல்வம், பூச்சியியல் துறை சார்ந்து இயங்கி வருபவர். ''வானம் பார்த்த மானாவாரிக் காடுகளில் கூட, பரவலாக நம்முடைய பாரம்பரியத்



# வசப்படும்

"நுகர்வோர்க்கு எதிர்காலத்திலாவது நஞ்சற்ற உணவையும் நோயற்ற உடலையும் தரும் ஏற்பாடுதான் வானகம்!"

தானிய வகைகளைப் பயிர் செய்வது என்பது மிகமிக அரிதாகி வருகிறது. பாரம்பரியத் தானியங்களின் சாகுபடிக்கு, வழிகாட்டுதல் பயிற்சி மையம் வானகம்!'' என்கிறார்.

''நமக்குக் கிடைச்சு வர்ற, கிடைக்கப் போற எல்லாமே இந்த மண்ணுக்குள்ளதான் இருக்குது. இந்த மண் வளத்தைக் காப்பது நம் கடமை. அதற்கு மழை அவசியம். அப்போ மரங்களும் அவசியம். வறட்சி நிலவும் புதுக்கோட்டை மாவட்டத்துல, மரங்கள் வளர்ப்பு குறித்து விழிப்புணர்வு ஏற்படுத்தி வருகிறோம். நாற்பத்தைந்து கிராமங்கள்ல வீட்டுக்கு ஒரு மரம் வளர்க்கும் திட்டச் செயல்பாட்டினை நிறைவு செய்துள்ளோம்!'' என்கிறார் கிராமியா தொண்டு நிறுவன இயக்குனர் கனகாபாய்.

''எங்க நிலத்துல எந்த இடத்துல கைப்பிடியளவு மண்ணெடுத்தாலும், அதுல கெமிக்கல், இரசாயன உரக்கலப்பற்ற மண்ணா மாத்த முயற்சி செஞ்சோம். அதுக்கே ஆறேழு வருஷமாச்சு. இப்ப எங்க முப்பது ஏக்கர் நெலத்துலயும் இயற்கை வளம் கொழிக்குது. ஆடு மாடு மேய்றதுக்குன்னே பத்து ஏக்கர்ல புல்லு. மக்க மனுசா சாப்பிட மூணு ஏக்கர்ல நெல்லு. மூணு ஏக்கர்ல

• நம்மாழ்வார்



# வானகம்!



✱ லெனின்



✱ கலைச்செல்வி



✱ செல்வம்

நிலக்கடலையும், முருங்கையும் உண்டு. பதினைஞ்சு ஏக்கர்ல சுமார் ஆயிரம் தென்னை இருக்கும். இளநீரும் நல்ல ருசி. தேங்காயும் அத்தினி ருசி!''. புன்னகைக்கிறார் வானகத்தின் ஐந்து நாள் உழவர் சங்கம் விழாவில் பங்கேற்க வந்திருக்கும் தாராபுரம் கலைச்செல்வி.

''வாழத் துணிந்தவர்களின் முகவரி இது!'' என்கிறார் இயற்கை விவசாயப் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருக்கும் இளம் வித்து ஏங்கெல்ஸ் ராஜா. தீவிர இயற்கை விவசாயி, அவரது தந்தை லெனின். ''பயிர் சாகுபடிக்கு உகந்த, பயிர் சாகுபடி ஏதும் செய்யப்படாத தரிசு நிலங்கள் இந்தியாவில் வெகு அதிகம். அதுபோன்ற தரிசு நிலங்களிலும், அதிகச் சத்து மிகுந்த தானியங்களை விளைவிக்கலாம் என்பதை நிரூபிக்கவே வானகம் இயங்கி வருது!'' என்கிறார் இவர்.

''ஆளுயர வேலிக்கருவைச் செடிகளும், நிலத்தில் சிறு சிறு கற்களும் நிறைந்து கிடந்த பிரதேசம் இது. நாங்கள் தேடிக் கொண்டிருந்தது இதுபோன்றதொரு இடத்தைத்தான். இயற்கை வேளாண் முறையில் சாகுபடி செய்திடப் பெருஞ்சவாலாக இதனை ஏற்றுக்கொண்டது வானகம். அதில் பெரும் வெற்றியும் கண்டுள்ளது.

வணிக வேளாண்மையில் சிக்கி, 'பயிர்த் தொழில் என்னைக் கைவிட்டுவிட்டது' என்று கலங்கி நிற்பவர்களுக்கு 'வானகம்' ஒரு கலங்கரை விளக்கம். மேலும், இரசாயனங்களே உணவு, இரசாயனங்களே மருந்து என்னும் சிக்கலில், உழலும் நுகர்வோரின் எதிர்கால வாழ்விலாவது நஞ்சற்ற உணவையும் நோயற்ற உடலையும் தரும் ஏற்பாடுதான் வானகம்!'' என்கிறார் நம்மாழ்வார்.

இயற்கை மலைகள் சூழ்ந்த நடுவெளியில், உழவர் சங்கமம் ஐம்பெரும் விழாவினை ஐந்து தினங்கள் நடத்தியது வானகம். இயற்கை நல்வாழ்வுப் பயிற்சியும் சிகிச்சையும், சித்த மருத்துவப் பயிற்சியும் சிகிச்சையும், ஹோமியோ மருத்துவம் மற்றும் அக்குபஞ்சர் மருத்துவப் பயிற்சியும், சமூகச் சிந்தனையாளர்கள் அரங்கமும், இயற்கை உழவர்கள் பயிலரங்கமும், உழவர்கள் சங்கமமும் அங்கு நடத்தப்பட்டன. தமிழ்நாட்டின் பல இடங்களிலிருந்தும் தினசரி நூற்றுக்கணக்கானோர் அதில் பங்கேற்றனர்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

## காதில் விழுந்தவை

# சரத் Vs ஃபெப்ஸி!

பெட்ரோல், டீஸல் விலை உயர்வின் மூலம் சாமான்யர்களைப் போட்டுத் தாக்குகிறது மத்திய அரசு. ஆனால், 'மான்யம்' என்ற பெயரில் அரசியல்வாதிகளும் வசதியானவர்களும் கொள்ளையடிக்க அதே அரசு வசதி செய்து தருகிறது என்று, நம் துறைமுக நண்பர் சொன்னபோது கொதித்துப் போனோம். விஷயம் இதுதான்: நடுத்தர மீனவர்கள், மோட்டார் படகு வைத்திருந்தால் அவர்களுக்கு டீஸல், லிட்டர் ஒன்றுக்கு ஆறு ரூபாய் (வெளிச்சந்தையில் விலை 34 ரூபாய்) குறைத்துக் கொடுக்கிறார்கள். அதே சமயம், ஆழ்கடலில் போய் மீன் பிடிக்கும் கப்பல்களுக்கு, பதினெட்டு ரூபாய் குறைத்து டீசல் வழங்கப்படுகிறது. அதாவது பதினெட்டு ரூபாய் அரசு வழங்கும் மான்யம். ஆழ்கடலில் மீன் பிடித்து ஏற்றுமதி



செய்வதன் மூலம் இந்தியாவுக்கு அந்நியச் செலாவணி பெற்றுத் தருவதால் இந்த மான்யமாம். ஆனால், உண்மையில் என்ன நடக்கிறது? ஆழ்கடலில் மீன் பிடிக்கும் கப்பல்களை வைத்திருப்பவர்கள் 90 சதவிகிதம் பேர் அரசியல்வாதிகளும், பெரிய நிறுவனங்களும்தான். இவர்கள் மான்ய விலையில் டீஸலை வாங்கிவிட்டுப் பயன்படுத்தாமல் அப்படியே பொதுச் சந்தைக்கு அதிக விலைக்கு கைமாற்றி விடுகிறார்களாம். கப்பல்கள் கரையிலேயே இருக்க, லட்சக்கணக்கில் பணம் குவிக்கிறார்கள். இதற்கு நிறுவன அதிகாரிகளும் உடந்தை என்பது சொல்லாமலே விளங்கும். இப்படி அரசாங்கத்தை ஏய்த்துப் பிழைக்கும் கொள்ளைக்காரர்களில், ஒரு மத்திய அமைச்சரின் குடும்பமும் இருக்கிறது என்பது கூடுதல் வயிற்றெரிச்சலைத் தரும் தகவல்.

இலங்கைக்குப் போய் படப்பிடிப்பு நடத்தக் கூடாது; இலங்கையில் திரைப்படத் தொடர்பான விழாக்களில் தமிழ் நடிகர், நடிகைகள் கலந்து கொள்ளக் கூடாது என்று ஃபெப்ஸி தடைவிதித்திருக்கிறது. இந்த நிலையில் நடிகர் சங்கத் தலைவர் சரத்குமார், ''இந்திய வர்த்தகர்களும், தொழிலதிபர்களும் இலங்கைக்குச் சென்று தொழில் செய்கிறார்கள். அப்படியிருக்க, திரைப்படத் துறை மட்டும் ஏன் ஒதுங்கிக் கொள்ள வேண்டும். படப்பிடிப்பு நடத்தத் தடை எதும் போடக் கூடாது'' என்று குரல் கொடுக்கிறாராம். இதனால் ஃபெப்சி மட்டுமல்லாமல், தமிழ்ப் படத் தயாரிப்பாளர் சங்கமும் சரத் மீது கடுப்பில் இருக்கிறது.

- சஞ்சயன்





# ஓவிய லீலா!



''நான் கர்ப்பத்துலேயே ஓவியம் கத்துக் கிட் டேன்'' என்கிறார் மோகன் கனகசபை. ''அதெப்படிங்க கர்ப்பத்துலேயே கத்துக்க முடியும்''னு கேட்டா, ''என் ஓவியத்துக்கு குருன்னு யாரும் கிடையாது. யார்கிட்டேயும் போய் கத்துக்கலை. ஆனால, நான் கர்ப்பத்துல இருக்கும்போது எங்க அம்மா சென்னை ஓவியக் கல்லூரியில ஓவியம் கத்துக்கிட்டாங்க. ஆனா, அவங்ககூட ஓவியம் கத்துக்கச் சொல்லி என்னை ஃபோர்ஸ் பண்ணினது இல்லை. இயல்பாவே என் கவனம் ஓவியம் மீது குவிஞ்சது'' என்கிற மோகன் கனகசபை, நாகையில் மருத்துவராகப் பணிபுரிபவர்.

''உங்க ஓவியத்துல கண்ணனோட ஆதிக்கம் வெகு அதிகமா இருக்கே''ன்னு கேட்டா, ''போர்க்களத்துல கூட புல்லாங்குழல் ஏந்துனவன் ஸார் கண்ணன். அவனை தூரிகையில் ஏந்துறதுதான் என் ஓவியத் தவம்ங்க'' என்கிறார்.

மோகன் கனகசபை



- கதிர்பாரதி



ஐந்து வருடங்களுக்குப் பிறகு சென்னையில் ஆடவந்த சாய்னா நேவால், இந்தியன் ஓப்பன் கிராண்ட் பிரிக்ஸ் கோப்பையுடன் திரும்பிச் சென்றிருக்கிறார். சாய்னாவுக்குச் சென்னையில் கிடைத்த ஆச்சரியம், ரசிகர்களின் ஆதரவு. இறுதிப் போட்டியில் அரங்கம் முழுவதும் நிரம்பி இருந்ததைப் பார்த்து மிகவும் வியப்படைந்தார் சாய்னா. சென்னையில் கிரிக்கெட் தவிர மற்ற விளையாட்டுகளுக்கும் மக்கள் ஆதரவு தருவது சந்தோஷம் கொடுக்கிறது என்றார். இதற்கு முன்னால் உலக அரங்கில் இந்தியாவின் கொடியை உயர்த்தியவர் பி.டி. உஷா. அதற்குப் பிறகு பளு தூக்கும் வீராங்கனைகள் இந்தியாவின் பெருமையை நிலைநாட்டினார்கள். இப்போது சாய்னாவின் தயவால், பேட்மிண்டன் வட்டாரத்தில் இந்தியாவுக்குத் தனி அந்தஸ்து கிடைத்திருக் கிறது.

# சாய்னா புயல்




இந்திய அணியின் ஜிம்பாப்வே சுற்றுப்பயணம், இவ்வளவு மோசமாக அமையும் என்று யாரும் கனவில் கூட நினைக்கவில்லை. ஜிம்பாப்வேவுடன் ஆடிய இரண்டு ஒருநாள் ஆட்டங்களிலும் இந்தியா மண்ணைக் கவ்வியது. இந்தியாவின் அடுத்த தலைமுறை கிரிக்கெட் வீரர்களின் திறமை போதாமையை, வெளிச்சம் போட்டுக் காட்டிவிட்டது. அதே சமயம் இங்கிலாந்துக்கு ஆடச் சென்ற இந்தியா ஏ அணியில் ஒரு நம்பிக்கை நட்சத்திரம் கிடைத்திருக்கிறது. உனாட்கட் என்கிற 18 வயது புதிய வீரர் தன் பந்துவீச்சினால் கவனம் பெற்றிருக்கிறார். இந்தப் பாலகனைத்தான் வாசிம் அக்ரம் வருங்கால நட்சத்திரம் என்று சமீபத்தில் சொன்னார். இந்திய அணியில் நிலவும் சூழலில் உனாட்கட்டுக்கு விரைவில் நாட்டுக்குச் சேவை செய்ய வாய்ப்பு கிடைக்கும்.

யுவ்ராஜ் சிங்கை ஆசியக் கோப்பை அணியிலிருந்து நீக்கியதால், யுவ்ராஜ் மீதான அனு தாபங்கள் அதிகரித்திருக்கின்றன. ட்விட்டரில் வந்து அடிக்கடி பேசும் யுவ்ராஜ், தனக்கு வாழ்த்து சொல்லும் நல்ல உள்ளங்களுக்கு அதன் வழியாகவே நன்றி சொல்கிறார். ஆனால் இங்கே



ச.ந.கண்ணன்

இந்தியக் கால்பந்து அணியால் உலகக் கோப்பையில் பங்கு பெற முடியுமா? இப்போது அது தரவரிசைப்பட்டியலில் 132வது இடத்தில் இருக்கிறது. ஆனால் உலகக் கோப்பையில் ஆடும் அணிகளின் எண்ணிக்கையோ 48 மட்டுமே. நமக்கான ஆறுதல் தகவல் - தரவரிசைப்பட்டியலில் 83வது இடத்தில் உள்ள தென் ஆப்பிரிக்காவும் 105வது இடத்தில் உள்ள தென் கொரியாவும் இந்த 2010 உலகக் கோப்பையில் ஆடி வருகின்றன. உலகக் கோப்பைப் போட்டியில் ஆடுவதற்கான தகுதிச்சுற்றுப் போட்டியில், ஒழுங்காக ஆடி ஜெயித்தால் இந்திய அணியாலும் உலகக்கோப்பையில் பங்குபெற முடியும்.

பி.டி. உஷா போல ஒரு தேசியப் பெண்மணியைக் காணமுடியாது. ஓடினோம், முடித்தோம் என்றில்லாமல், கேரளாவில் தனியாக விளையாட்டு அகாதமி ஒன்று ஆரம்பித்து இளம் வீரர்களை ஊக்கப்படுத்தி



வருகிறார். இதற்கு அவர் சொல்லும் ஒரே காரணம், 'நான் பட்ட அவஸ்தைகள் மற்றவர்கள் படக்கூடாது.' இப்போது உஷாவின் வளர்ப்பில் உருவாகி வரும் டிண்டு லூகா என்கிற இளம் வீராங்கனை 800 மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் உஷாவின் கனவை நிறைவேற்றிக்கொண்டிருக்கிறார். '2010 ஒலிம்பிக்ஸுக்காக லூகாவைத் தயார் செய்துவருகிறேன்' என்கிறார் உஷா. சொன்னதோடு மட்டுமில்லாமல் லூகா கலந்துகொள்ளும் எல்லா போட்டிகளுக்கும் கூடச் சென்று அவர் உற்சாகப்படுத்துகிறார்.



யுவ்ராஜுக்குச் சிக்கலும் உண்டு. ஆசியக் கோப்பையில் ரோஹித் அல்லது கோலி இருவரில் ஒருவர் பட்டையைக் கிளப்பினாலும், அது யுவ்ராஜுக்கு இன்னொரு தலைவலியைக் கொடுக்கும்.

மீண்டும் டேவிஸ் கோப்பை போட்டி சென்னைக்குத் திரும்பியிருக்கிறது. சென்ற வருடம் சென்னையில் இந்தியாவும் ஆஸ்திரேலியாவும் ஆடவிருந்தன. ஆனால் பாதுகாப்பு அச்சுறுத்தலை முன்னிறுத்தி ஆஸ்திரேலியா போட்டியிலிருந்து விலகியது. இப்போது பிரேஸிலுடனான டேவிஸ் கோப்பை ஆட்டம் மீண்டும் சென்னைக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. முந்தைய போட்டி ரத்தானதால் மட்டுமல்ல,

இந்தியாவின் இளம் முன்னணி வீரரான சோம்தேவ்வர்மனுக்குச் சென்னை நுங்கம்பாக்கம் மைதானம் மிகவும் ராசியான ஒன்று. சென்ற வருடம் நடந்த சென்னை ஓப்பன் போட்டியில் இறுதிச் சுற்றுவரை முன்னேறினார் சோம்தேவ். இதனால் சோம்தேவ் உள்பட பல வீரர்களின் தேர்வாக இருந்திருக்கிறது சென்னை.



மழை வலுத்தது. தடதடவெனக் கொட்டியது. வானம் கறுத்துக்கொண்டு கோப முகம் காட்டியது. சாலையில் நீர் வெள்ளம் போல ஓடியது.

ஜன்னலுக்கருகே அமர்ந்து சாலையைக் கவனித்தபடி இருந்தேன். வெறிச்சோடிக் கிடந்தது.

"உங்களுக்கு ஜாலிதான்..."

தங்கமணி டீ கிளாஸை அருகில் வைத்துவிட்டுப் போனாள்.

சரிதான். மழை நாள் போல் மனசுக்கு மகிழ்ச்சியான நாள் வேறில்லை. அலுவலகத்துக்கு லீவு போட்டாயிற்று. மழை தொடரும் என்பதை உத்தேசித்து வீட்டுக்குத் தேவையான பொருட்களை வாங்கி ஃப்ரிட்ஜில் அடுக்கியாயிற்று. இன்வெர்ட்டர் உபயத்தில் மின்சாரம் போனாலும், பத்து மணி நேரங்கள் கவலை இல்லை. போன வருடம் புத்தகக் கண்காட்சியில் வாங்கிய புத்தகங்கள் வாசிக்கத் தயார்.

சாலையை வேடிக்கை பார்த்தபடி நேரத்தை ஆனந்தமாக நகர்த்தலாம். புத்தகம் போரடித்தால் எஃப்.எம்.ரேடியோ, அது சலித்தால் டீ.வி. அதுவும் போரடித்தால் சீட்டுக்கட்டு. அதுவும் அலுத்தால் கேரம்...

இப்படி ஓர் அழகான அட்டவணையில், சுகமாக மழையை அனுபவித்துக் கொண்டிருந்தேன். அடுக்களையில் தங்கமணி சமைக்கும் வாசம் மூக்கைத் துளைத்தது.

ஆள் நடமாட்டம் இல்லாத தெருவில் இப்போது மழை அடர்த்தி குறைந்திருக்க... அவன் தெரிந்தான்.

எதிர் அப்பார்ட்மெண்ட் வாசலில், தள்ளிச் செல்லும் வசதியுடன் கூடிய தையல் மிஷின் அவன் அருகே.

சுவரோடு ஒட்டியபடி நின்றிருந்தான். மழையை வெறிப்பதும் தையல் மிஷினைப் பார்ப்பதுமாக இருந்தான். அவன் தோற்றம் பரிதாபத்தை வரவழைத்தது. அழுக்கு வேட்டி, கிழிந்த சட்டை. முகத்தில் மழிக்காத தாடி, கண்களில் ஒரு சோகம். மதியம் சாப்பிட்டிருப்பானா? இப்படி மழை கொட்டுகிறதே... நீண்ட நேரமாக இங்கேயே நிற்பவன் போலத் தெரிகிறதே... டீ குடித்திருப்பானா? டீ கடை மெயின் ரோட்டில் அல்லவா இருக்கிறது?

ஏனோ தெரியவில்லை. இப்போது எனக்கு அவனைப் பற்றிச் சிந்திக்க வேண்டும் போலிருந்தது.

அடர் தொடர் மழை என்னைப் போல அரசாங்க உத்யோகவாசிகளுக்குச் சுகமாக இருந்தாலும். அன்றாடங்காய்ச்சிகளுக்கு.. கஷ்டம்தான்.

அதுவும் நிரந்தர வருமானமின்றி, சாலையோர வியாபாரிகளுக்கு... குறிப்பாக செருப்பு தைப்பவர்கள், பழ வியாபாரிகள், காய்கறி வண்டிக்காரர்கள்... சாணம் பிடிப்பவர்கள்... இதுபோல மொபைல் தையல்காரர்கள்...

கொட்டும் மழையில் அவனால் வண்டியைத் தள்ளிக் கொண்டு நான்கு தெரு போக முடியாது. யாரும் கிழிந்த துணி தைக்க வரவும் மாட்டார்கள். இவனுக்குக் குடும்பம் குழந்தைகள் இருக்குமே... நடுத்தர வயதுக்காரனாகத் தெரிகிறான். நிச்சயம் குடும்பம் இருக்கும். என்னைப் போல இரண்டு பெண் குழந்தைகளும் இருக்கலாம். இவனின் வருமானத்தை நம்பி... அப்பா சாயங்காலம் அரிசி, பருப்பு, பிஸ்கட்டோடு வருவார். சாப்பிடலாம் என்று அம்மாக்காரி அழும் குழந்தைகளைச் சமாதானப்படுத்திக் கொண்டிருப்பாளோ? ஒரு சமயம் ஊரெல்லாம் பன்றிக் காய்ச்சலாக இருக்கிறதே. இவன் குடும்பத்திலும் யாராவது அதில் பாதிக்கப்பட்டு வைத்திய செலவுக்கு இவனின் வருமானத்தை எதிர்பார்த்துக் காத்திருப்பார்களோ...

மனசு குறுகுறுத்தது.

தங்கமணி பிளேட்டில் சிக்கன் வறுவலைக் கொண்டு வந்து வைத்தாள். வாசம் தூக்கியது. ஆனாலும் எடுத்துச் சுவைக்க மனம் வரவில்லை.



"கல்யாணத்துல பந்தா அதிகமா இருந்ததாமே?"

"ஆமாம்... ஆசீர்வாதம்கூட துவரம் பருப்பைத் தூவித்தான் பண்ணாங்க...!"

- லெ.நா.சிவகுமார்

இப்போது மீண்டும் மழை.

"மத்தியானத்துக்கு பிரியாணி வைக்கிறேங்க. இன்னைக்கு நிதானமா செய்யப் போறேன். நீங்க வாங்கிட்டு வந்தீங்களே... அந்தப் பாசுமதி அரிசியிலங்க..."

"ம்... தங்கமணி, அங்க பார்த்தியா?"

"எங்க?"

"எதிர் அபார்ட்மெண்ட் வாசல்."

"ஆமாம். தையக்காரன்..."

"பாவம் இல்ல..."

"அதெல்லாம் எனக்குத் தெரியாதுங்க. உங்கள மாதிரி ஜன்னல்ட்ட உட்கார்ந்துக்கிட்டு மழையை ரசிக்கவும் தெரியாது. ரோட்டுல நிக்கறவன பார்த்துப் பாவப்படவும் முடியாது. வேணுமின்னா ரெண்டு இட்லி மிச்சம் இருக்கு. கொண்டு போய்க் கொடுங்க..."

"என் சட்டை ரெண்டு தையல் விட்டுப் போயிருக்குன்னு எடுத்து வெச்சிருந்தியே... அதைக் கொஞ்சம் எடு..."

"ஏன் தையல்காரன் வருமானத்துக்கு வழி பண்ணப் போறீங்களா... ரெண்டு சட்டைக்கும் அஞ்சு ரூபாய்க்கு மேல ஒரு பைசா கொடுக்காதீங்க..." என்றபடி எடுத்துக் கொடுத்தாள்.

வாங்கிக் கொண்டு குடை எடுத்துக் கொண்டு வேகமாக வீட்டை விட்டு வெளியே வந்தேன்.

**கை**யில் துணியைப் பார்த்ததும் அவன் முகத்தில் மகிழ்ச்சி.

"இதை தைச்சுக் கொடுப்பா..."

"குடு சார்..." ஆர்வமாக வாங்கினான்.

தையல் மிஷினை உள்ளே இழுத்து போர்டிகோவில் வைத்து விறுவிறுவென வேலையைத் தொடங்கினான்.

நான் அவன் கைகளும் கால்களும் இயங்குவதை ஆர்வமாக வேடிக்கை பார்த்தேன்.

பத்து நிமிடத்தில் முடித்து விட்டான்.

"எவ்வளவுப்பா...?"

என்னை உற்றுப் பார்த்தவன், குரலை தழைத்து, "பத்து ரூவா குடு சார்."

சட்டைப் பையில் கை விட்டேன். ஒரு ஐந்து ரூவா காசும், நூறு ரூபாய் நோட்டும் இருந்தது.



சில விநாடிகள் யோசித்தேன். அவன் குடும்பம் நிழலாய் உள்ளுக்குள் ஓடியது.

நூறு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினேன்.

''சில்லறை இல்ல சார்...''

''இல்லப்பா... நீயே வெச்சுக்கோ...''

சந்தோஷத்தில் அவன் முகம் திக்கு முக்காடியதை ஓரிரு விநாடிகள் ரசித்துப் பார்த்துவிட்டு நடந்தேன். வீட்டுக்குள் வந்த போது சந்தோஷமாக இருந்தது. ஏதோ பெரிய சாதனை நிகழ்த்தி விட்ட மாதிரி மனசு கும்மாளமிட்டது. ஈரச் சட்டையைக் கழற்றிவிட்டு தைத்த பழைய சட்டையைப் போட்டுக் கொண்டேன்.

பிரியாணி சாப்பிடத் தயாரானேன்.

''என்னங்க... கூட்டிப் பெருக்கற அம்மாவுக்குப் பணம் தரணும். உங்ககிட்ட சில்லறையா இருக்கா?''



தங்கமணி என் சட்டைப் பையில் கை விட்டாள்.

ஐந்து ரூபாயை எடுத்தவள், யோசித்த படி, ''ஏங்க... காலைல சிக்கன் வாங்கப் பணம் எடுக்கறப்ப நூறு ரூவா நோட்டுப் பார்த்தேனே... இப்ப அஞ்சு ரூவா காயின் மட்டும்தான் இருக்கு.. துணி தைக்கறவனுக்கு எவ்வளவு கொடுத்தீங்க...?''

எனக்கு சுள்ளென்று உறைத்தது. ஆஹா... மாட்டியாயிற்று.

''அஞ்சு ரூபாதான் கொடுத்தேன்...''

''பொய் சொல்லாதீங்க... காலைல நான் பார்த்தேன். இப்ப நூறு ரூவா நோட்டக் காணோம். அஞ்சு ரூவா இருக்கு. மனசுல என்ன நெனைச்சுக்கிட் இருக்கீங்க. நூறு ரூவாயை அள்ளி விட்டுட்டு வந்திருக்கீங்க..'' என்றவள், என்னை முறைத்துவிட்டு வேகமாக அடுப்படிக்குள் சென்றாள்.

நான் பதில் பேசவில்லை. ஒரு மழை நேரத்தின் அருமையான நாளை சர்ச்சைக் குள்ளாக்க விரும்பவில்லை.

அவளின் மிச்ச சொச்ச கோபத்தை அடுக்களைப் பாத்திரங்கள் விவரித்தன.

**ம**தியம் சாப்பிடும்போதும் தங்கமணி கோபம் தணியவில்லை. முணகிக் கொண்டே பரிமாறினாள்.

''ஒரு பொருள் வாங்கினா கோபம் பொத்துக்கிட்டு வரும். அநாவசியமா செலவு பண்றேன்னு மல்லுக்கு நிப்பீங்க... பத்து புடைவைக்கு மேட்சிங் ஜாக்கெட் தைக்காம வெச்சிருக்கேன். வலிக்காம நூறு ரூவா பணத்தை தையக்காரன்கிட்ட தூக்கிக் கொடுத்திட்டு வந்திருக்கீங்க...''

''ச்சீ பாவம்டி...''

''என்ன பாவம்? உங்களுக்கு யாரு இது மாதிரி தூக்கிக் கொடுத்தா...? கல்யாணமாகி நாலு வருஷம் சந்தில நின்னோமே... யாரு வந்தா...?''

''நமக்கு யாரும் வர வேணாம்டி. ஆனா

நான் கஷ்டத்துக்கு உதவுவேன்.''

''ஆத்துல போடறதா இருந்தாலும் அளந்து போடணுங்க. ரொம்ப ஆட்டம் காட்டாதீங்க...''

''வாய அடக்கு. பேச்சு ஜாஸ்தியா இருக்கு.''

''என்ன ஜாஸ்தி... உண்மையைப் பேசினா உங்களால ஒத்துக்க முடியாதே...''

''என்னடி உண்மை?''

''ரொம்ப ஆடறீங்க. அதுதான் உண்மை.''

''நான் அப்படித்தாண்டி இருப்பேன். நாயே...''

பளிச்சென்று கையை உதறியபடி எழுந்தேன்.

கைகழுவி விட்டு சட்டையைப் போட்டுக் கொண்டு வெளியே வந்தேன்.

மழை தூறிக் கொண்டிருந்தது. தையல்காரன் காணாமல் போயிருந்தான். நூறு ரூபாய் வருமானத்தோடு இந்நேரம் வீட்டுக்குப் போயிருப்பானோ? குடும்பத்தோடு குதூகலமாகச் சாப்பிட்டுக் கொண்டிருப்பானோ? குழந்தைகளோடு சந்தோஷமாக இருப்பானோ?

இது பாவமா? தங்கமணி ஏன் புரிந்து கொள்ள மறுக்கிறாள்?

லாட்டரிச் சீட்டு வாங்கினேனா? குடித்தேனா...? இல்லை வேறு ஏதாவது தண்டச் செலவு செய்தேனா?

இன்றைய தினத்தோடு இந்தச் சண்டை முடியாது. தொடரும். வாய் வார்த்தைகள் தடிக்கும். சண்டையைத் தவிர்க்க எவ்வளவு நேரம் ரோட்டிலேயே பொழுதைக் கழிக்க முடியும். வீட்டுக்குச் சென்றுதான் தீர வேண்டும். அவள் பார்த்துப் பார்த்துச் செய்த பிரியாணியை வேறு உதாசீனப்படுத்திவிட்டு வந்திருக்கிறேன். அந்த ஆத்திரம் வேறு சேர்ந்து கொள்ளும்.

முருகா... இந்த மழை நாள் மறக்க முடியாமல் போய்விடுமோ?

தவறு யார் மீது?

ஒருவனுக்கு உதவ வேண்டும் என்று நினைத்தேனே, அது தவறா?

உதவியதை மறைக்க மறந்தேனே... ஒரு சமயம் அது தவறோ?

அயர்ச்சியான அந்தத் தருணத்தில் கூடத் தையல்காரனின் சந்தோஷ முகம் நினைவில் வந்து போனது. அவன் சந்தோஷமாக இருந்தால் சரி. அதுவே பெரிய திருப்திதான். தங்கமணியின் கோபம் ஒரு நாளில் அடங்கி விடும்.

யோசித்துக்கொண்டே சாலையைக் கடந்த போது அவனைப் பார்த்தேன். அதிர்ந்தேன். கிர்ரென்று தலை சுற்றியது. போன நிமிடம் வரை மனசுக்குள் ஓடிக்கொண்டிருந்த சந்தோஷ உணர்வு சட்டென அறுந்து விழுந்தது.

பேருந்து நிறுத்தத்தில் அவன் படுத்திருந்தான். இல்லை கிடந்தான்.

வேட்டி நழுவி இருந்தது.

அருகில், அநாதையாக தையல் மிஷின் மழையில் நனைந்தபடி...



''அந்த ஆள் ரொம்ப கஞ்சப் பேர்வழி''
''நிஜமாவா''
''ஆமாம்! வீடு தீப்பிடிச்சு எரிஞ்சா கூட தீயணைப்பு நிலையத்துக்கு மிஸ்டு கால்தான் கொடுப்பான்''

- வி.பார்த்தசாரதி

# பற்றிக்கொள்ளும் கற்பூரம்!



■ கோபுலு

அந்தக் காலத்திலே பிரிட்டனின் 'டேவிட்லோ' என்ற உலக மகா கார்ட்டூனிஸ்ட் இருந்தார். அவர் போன்ற கார்ட்டூனிஸ்டு இனி பிறக்கப் போவதில்லை. 'லோ'வின் கார்ட்டூனின் பாணியின் தாக்கத்தால், உலகில் உருவான கார்ட்டூனிஸ்டுகள் பலர். நம் நாட்டிலும் அதன் தாக்கத்தால் பல கார்ட்டூனிஸ்டுகள் உருவானார்கள். அடுத்த தலைமுறை கார்ட்டூனிஸ்டுகள் பலர் பலவித புது முயற்சிகள் செய்யலானார்கள்.

அந்தப் பரம்பரையில் உருவானவரே நமது கார்ட்டூனிஸ்டு 'மதி' அவர்கள். 'மதி' ஒரு முழுமையான அரசியல் கார்ட்டூனிஸ்ட். காலையிலிருந்து மாலைக்குள் மறுநாள் தினசரிக்குத் தேவையான கார்ட்டூனை யோசித்து, கருத்தை ஒரு முகப்படுத்தி புதிய கோணத்தில் ஹாஸ்யம் ததும்பக் கருத்தைப் படமாய்ச் சித்தரித்து அளிக்க வேண்டும். அறுசுவை ருசியுடன் கார்ட்டூன் வெளியிட வேண்டும், நான்கு சதுரத்துக்குள்ளே இத்தகைய கார்ட்டூனைத் தயார் செய்வதில் 'மதி'யின் மதி அபாரம்! வருடம் முழுவதும் அதிஅற்புதமான கார்ட்டூன்களை தினமணி நாளேட்டிலே அதிஅற்புதமாய் வெளியிட்டு வருகிறார்.

ஆங்கிலத்தில் கார்ட்டூன் போட்டால் ஆங்கில அறிவு பெற்றவர்கள் கொளுத்திய கற்பூரம் போல் உடனே புரிந்து கொள்வார்கள். தமிழில் கார்ட்டூன் போட்டால், வாசகர்கள் தோளில் கை போட்டு அழைத்துக் கொண்டு போனால் புரிந்து கொள்வார்கள். நமது தமிழ் வாசகர்கள் மட்டம் என்று சொல்லவில்லை. கார்ட்டூன் கருத்தைப் புரிய சிறிது தாமதமாகும். ஆனால், நமது 'மதி'யில் கார்ட்டூன்கள் கற்பூரம் போல் உடனே புரியவைக்கிறார்.

இதுவரை பல புத்தகத் தொகுப்புகளை 'மதி' வெளிக் கொணர்ந்து விட்டார். இன்று அதைப் பார்த்தாலும் திகட்டா விருந்து. பல ஆண்டுகள் அரசியல் நிகழ்ச்சிகளை படம்பிடித்து, ஹாஸ்யம் ததும்பக் கார்ட்டூன் மூலமாய் எல்லாக் காலத்திலும், எல்லோரும் பார்த்து ரசித்து, சிரிக்க இந்த கார்ட்டூன் களஞ்சியங்கள் அற்புதம். 'மதி' அவர்களின் பார்வையில் அகப்படாத அரசியல், சமூக, கோமாளித்தனமான நிகழ்ச்சிகளே இல்லை. ஒரு நாளா, இரண்டு நாளா? வருஷக்கணக்கில் கார்ட்டூன்களை வரைந்து தள்ளியுள்ளார். எல்லாக் கார்ட்டூன்களும் அட்சர லட்சம் பெறும். கற்பனை, அதை வெளியிட்ட திறமை கைவன்மைமிக்க சுருதி சுத்தமான படங்கள், பிசிறு இல்லா படங்கள். 'மதி'யின் மதியில் தயாரான சிறந்த ஓவியப் படங்கள் இவை.




இதைத் தயாரித்த கிழக்குப் பதிப்பகத்தைப் பாராட்ட வேண்டும். ●

புத்தக விமர்சனம்

இந்த வருடத் தொடக்கத்தில், எடியூரப்பா தெள்ளத் தெளிவாக அறிவித்துவிட்டார். 'வருகிற சட்டமன்றத் தொடரில் பசுவதைத் தடுப்புச் சட்டத்தை நிறைவேற்றப் போகிறோம். பின்வாங்க மாட்டோம்.'

கர்நாடகா முழுவதும் பரபரப்பு கிளம்பியது. 'முதலமைச்சர் யாரோ சில சாமியார்களின் பேச்சைக் கேட்டுத்தான் இப்படியெல்லாம் செய்கிறார்' என்று எதிர்க்கட்சிகள் கண்டித்தன.

இதற்கு எடியூரப்பா முன்வைக்கிற வாதம், 'குஜராத், மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான், சட்டிஸ்கர், ஜம்மு காஷ்மீர் போன்ற இந்திய மாநிலங்களிலும், க்யூபா, ஈரான் போன்ற வெளிநாடுகளிலும் கூட இந்தச் சட்டம் அமலில் இருக்கிறது. இது பசுக்களைப் பாதுகாக்கும் ஒரு முயற்சி அவ்வளவுதான்.'

இதன்படி, பசுக்களைக் கொல்கிறவர்கள், அவர்களுக்குத் துணைபோகிறவர்கள், அதன் இறைச்சியை விற்பனை செய்கிறவர்களுக்கெல்லாம் ஒன்று முதல் ஏழு வருடங்கள் வரை சிறைத் தண்டனை வழங்கப்படும். தவிர, இருபத்தைந்தாயிரம் ரூபாயிலிருந்து ஒரு லட்சம் ரூபாய் வரை அபராதம்.

இந்தத் தகவல்கள் வெளியான பிறகு, பல மக்கள் இயக்கங்கள் சாலையில் இறங்கிப் போராட ஆரம்பித்தார்கள். இவர்களுடைய கோஷம், 'நாங்கள் என்ன சாப்பிட வேண்டும் என்பதைத் தீர்மானிப்பதற்கு பா.ஜ.க. அரசாங்கத்துக்கு ஏது உரிமை?'



* ஹெச்.ஆர். பரத்வாஜ்



* யு.ஆர். அனந்தமூர்த்தி



* கிரீஷ் கர்நாட்

# கோமாதா

மங்களூரில் நடைபெற்ற ஓர் எதிர்ப்புப் பேரணியில் பேசிய முன்னாள் அமைச்சர் ஹனுமந்தையா, ''சைவம் சாப்பிடுகிறவர்களெல்லாம் நல்லவர்கள். அசைவம் சாப்பிடுகிறவர்கள் கெட்டவர்கள் என்கிற பிம்பத்தை உருவாக்க எடியூரப்பா முயற்சி செய்கிறார்'' என்று கண்டித்தார்.

''சமீபத்தில் பெங்களூரில் நடைபெற்ற ஒரு சர்வதேச மாநாட்டுக்காக, 3000 கிலோ சிக்கனும், மட்டனும் பரிமாறப்பட்டது. இதெல்லாம் மிருகவதையின் கீழ் வராதா?'' என்கிறார் இவர். மேலும், 'இந்த ஆட்சியில் பசுக்களுக்கு ஒரு நியாயம். ஆடுகள், பன்றிகள், கோழிகளுக்கு இன்னொரு நியாயமா?'' என்றும் கேட்கிறார்.

உண்மையில், எடியூரப்பாவின் நோக்கம் பசுக்களைக் காப்பாற்றுவது அல்ல. ஆர்.எஸ்.எஸ்., மற்ற இந்துத்வா சக்திகளைத் திருப்திப்படுத்தத்தான் அவர் இப்படிச் செய்கிறார் என்கிறது ஒரு கோஷ்டி. பசுக்களைக் காப்பாற்றிக் 'கோ-சாலை' அமைப்பதாகச் சொல்லிக் கொண்டு, பல ஏக்கர் கணக்கில் நிலங்களைக் கைப்பற்றுவதற்கான மாஃபியா முயற்சிதான் இது என்கிறது இன்னொரு கோஷ்டி.

''இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டால், கிராமப்புறங்களைச் சேர்ந்தவர்கள் பசு வளர்ப்பதையே நிறுத்திவிடுவார்கள்.

கடுமையான பால் பற்றாக்குறை வரும்'' என்கிறார் ஞானபீட விருது பெற்ற எழுத்தாளர் யு.ஆர். அனந்தமூர்த்தி. 'ஒருவருடைய உணவுப் பழக்கம் மற்றவர்களைப் பாதிக்காதவரை அதை ஏன் தடுக்க வேண்டும்?' என்பது புகழ்பெற்ற கன்னட எழுத்தாளர் கிரீஷ் கர்நாடின் கேள்வி.

இந்தச் சட்டம் கர்நாடகச் சட்டமன்றத்தால் மட்டுமே முன்வைக்கப்பட்டிருக்கிறது. கவர்னர் ஹெச்.ஆர். பரத்வாஜ் இதனை ஏற்றுக்கொண்டு கையெழுத்திட்ட பிறகுதான் அது முழுமையான சட்டமாகும். ஏதனாலோ, பரத்வாஜ் இன்னும் ஏற்றுக்கொள்ளவில்லை.

இதுவரை சும்மா இருந்த கவர்னர், இப்போது வாய் திறந்திருக்கிறார், ''இந்தச் சட்டம் இன்னும் என்னுடைய பார்வைக்கு வரவில்லை. அப்படி வரும்போது என்ன செய்ய வேண்டும் என்று யோசித்து முடிவு செய்வேன்.''

அத்தோடு 'தனிப்பட்ட முறையில் இந்தச் சட்டம் எனக்குச் சந்தோஷம் அளிக்கவில்லை' என்று சொல்லி சலசலப்புக்கும் வித்திட்டிருக்கிறார்.

எடியூரப்பா - எதிர்க்கட்சிகள் இடையிலான இந்த இழுபறியில் சிக்கித் திணறுவது அப்பாவிப் பசுக்களும், அவற்றை உணவாக நம்பியிருக்கும் மக்களும்தான்!



● எடியூரப்பா

# எங்கள் குலமாதா..!

கவர்னர் இப்படிச் சொன்னதும், பா.ஜ.க. கொதிக்கிறது. 'மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய சட்டமன்றத்தின் முடிவை விமர்சிக்க கவர்னருக்கு எந்த உரிமையும் இல்லை' என்பது அவர்களுடைய வாதம்.

என்.சொக்கன்

# குடும்ப அரசியல்; குறி

**தி.மு.க., அ.இ.அ.தி.மு.க. என்று இரு கட்சி ஆட்சிகளின்போதும் பழிவாங்கப்பட்ட ஒரே ஐ.ஏ.எஸ். அதிகாரியாக, உமாசங்கர் மட்டும்தான் இருப்பார் போலிருக்கிறது. ''இதிலிருந்தே அவர் நேர்மையாவும் நடுநிலையாகவும் பணியாற்றுவது புரியும். இப்போது லேட்டஸ்டாக அவர் மீது சொத்துக் குவிப்பு வழக்குப்போட முனைப்பு காட்டி வருகிறது ஊழல் கண்காணிப்புத் துறை. அதை எதிர்த்து உயர்நீதிமன்றத்தில் தடை வாங்கியிருக்கிறார் உமாசங்கர். ''முதல்வரின் குடும்ப அரசியலில் இந்த அதிகாரி குறிவைக்கப்பட்டுக் குதறப்படுகிறார்,'' என்கிறார்கள் அவரது நண்பர்கள். விவகாரத்தின் உள்ளே சற்று எட்டிப்பார்த்தோம்.**



★ உமாசங்கர்

மயிலாடுதுறையில் சப்- கலெக்டராகப் பணியில் நுழைந்தவர் உமாசங்கர் (1990-ல்). 47 வயதான இந்த அதிகாரி, இப்போது சிறுசேமிப்பு ஆணையராக இருக்கிறார். இந்த இருபது வருடங்களில் இவர் கண்ட சோதனைகளும், செய்து முடித்த சாதனைகளும் நிறைய. 1995-ல் மதுரை மாவட்டத்தில் கூடுதல் கலெக்டராக இருந்தபோது ''சுடுகாட்டுக் கூரைகள் கட்டுவதில் ஊழல் நடந்திருக்கிறது; அதற்கு மாவட்டக் கலெக்டரும், அப்போதைய உள்ளாட்சித்துறை அமைச்சருமான செல்வகணபதியும்தான் காரணம்'' என்று தைரியமாகவும் ஆதாரபூர்வமாகவும் எடுத்துச் சொன்னார். (இதே செல்வகணபதி இப்போது தி.மு.க. பாசறையில்!) பின்னர் 1996-ல் தி.மு.க. ஆட்சிக்கு வந்தபோது, இணை கண்காணிப்புக் கமிஷனராக நியமிக்கப்பட்டார். அதைத் தொடர்ந்து ஜெயலலிதா மற்றும் அவரது அமைச்சர்கள், அதிகாரிகள் மீது பல்வேறு குற்றச்சாட்டுக்களின் பேரில் பல நீதிமன்றங்களில் வழக்கு தொடரப்பட்டது. கோப்புகளை ஆராய்ந்து தவறு செய்தவர்கள் மீது தக்க ஆதாரத்துடன் வழக்குகளைத் தயார் செய்தவர் உமா சங்கர்தான்.

இரண்டு வருட காலம் அந்தப் பொறுப்பில் இருந்த பின், முதல்வரின் சொந்த மாவட்டமான திருவாரூருக்கு கலெக்டராக நியமிக்கப்பட்டார். அந்த மாவட்ட நிர்வாகத்தை முற்றிலும் கணினிமயப்படுத்தி, மின்னணு நிர்வாகத்தைப் புகுத்தியவர் உமாசங்கர். இதற்காக

இவருக்கு ஏராளமான பாராட்டுகள். 2001-ல் ஜெ.மீண்டும் ஆட்சிக்கு வந்ததும், ஒழுங்குமுறை ஆணையராக சேலத்துக்குத் தூக்கி அடிக்கப்பட்டார். திறமையான, நேர் மையான அதிகாரிக்குக் கொடுக்கப்பட்ட தண்டனைப் போஸ்டிங் இது. ஐந்து வருடம் சேலத்தில் பணி. 2006-ல் மீண்டும் தி.மு.க. ஆட்சி. எல்காட் (Elcot) நிறுவ னத்தின் நிர்வாக இயக்கு னராக நியமிக்கப்பட்டார்.

'இனி நிம்மதியாக நமது பணியைப் பார்த்துக் கொண்டிருக்கலாம்' என்று நினைத்தார் உமா சங்கர். சோதனை வந்தது. எல்காட் நிறுவனமும், நியூ எரா டெக்னாலஜி என்ற தனியார் நிறு வனமும் இணைந்து எல்நெட் என்ற நிறுவனத்தைத் துவங்கின. இந்த எல்நெட்

> **சுடுகாட்டுக் கூரைகள் கட்டுவதில் ஊழல் நடந்திருக்கிறது. அதற்கு மயிலாடுதுறை மாவட்ட கலெக்டரும், அப்போதைய உள்ளாட்சித்துறை அமைச்சர் செல்வகணபதியும் காரணம் என்று தைரியமாகச் சொன்னவர் உமாசங்கர் ஐ.ஏ.எஸ்.**

## ஐயோ பாவம் ஐ.ஏ.எஸ்!

போல உருமாறிவிட்டது. எல்காட் மற்றும் எல்நெட் நிறுவனங்களுக்கும் இடிஎல்லுக் கும் தொடர்பே இல்லா ததுபோல மதுரையைச் சேர்ந்த தொழிலதிபர் ஒருவர் ஹைஜாக் செய்து கொண்டு போய் விட் டார். எல்காட் நிர்வாக இயக்குனர் என்ற முறையில் கொதித்துப் போனார் உமாசங்கர். அலுவலகத்தில் இது தொடர்பான விவகாரங் களை அவர் ஆராய்ந்து கொண்டிருக்கும்போதே, 'அரசு கேபிள் கார்ப்ப ரேஷனி'ன் நிர்வாக இயக்குனராக மாற்றப் பட்டார். 700 கோடி சொத்து தனியார்

# வைக்கப்படும் அதிகாரி!

நிறுவனம் நூறு சதவிகிதம் நிதியுதவி வழங்க, இ.டி.எல். (ETL) கட்டுமான நிறுவனம் என்று ஒரு புதிய நிறுவனம் துவங்கப்பட்டது. இந்த இ.டி.எல். நிறு வனம் ராஜீவ் காந்தி சாலையில் 700 கோடி மதிப்புள்ள சிறப்புப் பொருளாதார மண்ட லத்தை துவங்கியது. புதிய தொழிலங்கள் துவங்க 18 லட்சம் சதுர அடி இடம் இ.டி.எல். வசம், தமிழக அரசால் ஒப்ப டைக்கப்பட்டது. ஆனால் திடீரென்று பார்த்தால், இந்த இ.டி.எல். நிறுவனம் முழுக்க, முழுக்கத் தனியார் நிறுவனம் கைக்குப் போக மதுரைத் தளபதிதான் சிபாரிசு என்கிறார்கள்.

அரசு கேபிள் கார்ப்பரேஷனில், உமா சங்கரின் அடுத்த இன்னிங்ஸ் துவங்கியது. 'தினகரனி'ல் மூன்று பேர் எரித்துக் கொலையானதைத் தொடர்ந்து மாறன் சகோதரர்களுக்கும் கலைஞர் குடும்பத்துக் கும் மோதல் துவங்கிட, அதைத் தொடர்ந்து சுமங்கலி கேபிள் விஷனை வீழ்த்த அரசு கேபிள் கார்ப்பரேஷன் முடுக்கிவிடப்பட்டது. கோடிக்கணக்கில்

பணம் செலவழிக்கப்பட்டு நவீனக் கருவிகள், இயந்திரங்கள் வாங்கப்பட்டன. ஆனால், ரவுடித்தனத்தைப் பயன்படுத்தி அரசு கேபிள் கார்ப்பரேஷனின் கேபிள்களையும் கருவிகளையும் சேதப்படுத்தியது எஸ்சிவி. வெகுண்டெழுந்த உமாசங்கர், எஸ்சிவியை தடை செய்யவும், அதற்கு ஆதரவாக இருந்து, அரசு சொத்தைச் சேதப்படுத்திய செம்மொழி மாநாடு நடக்கும் மாவட்ட அமைச்சர் மீது நடவடிக்கை எடுக்கக் கோரியும் அரசுக்குக் கடிதம் அனுப்பினார். ஆனால், அவரது துரதிருஷ்டம் 2009 பாராளுமன்றத் தேர்தலுக்கு முன் பிரிந்திருந்த முதல்வர் குடும்பம் மீண்டும் இணைந்தது. 'எங்களுக்கா வேட்டு வைக்கப் பார்த்தாய்' என்று வெகுண்டெழுந்தது குடும்பத்தின் ஒரு பிரிவு. கூடவே 1997-ல் உமாசங்கரால் ''தவறு செய்தவர்கள்'' என்ற அடையாளம் காணப்பட்ட அதிகாரிகளும் சேர்ந்து கொண்டார்கள். பழிவாங்கல் தொடர்கிறது. 'இது கலைஞருக்கு தெரியாமல்கூட இருக்குமா?' என்று வியக்கிறார்கள் சிலர்.



* செந்தில் ஆறுமுகம்

**''ஐ.ஏ.எஸ். பணிக்கு ஆசையோடு வரும் இளைஞர்களுக்கு லட்சிய அதிகாரி உமா சங்கர் போன்றோர்கள்தான். அவரைப் பழி வாங்குவது மோசமான முன் உதாரணம்.''**

சொத்துக் குவிப்பு வழக்குக்கு தடை வாங்கப் போடப்பட்ட மனுவில் மேற்சொன்ன தகவல்களைச் சொல்லியிருக்கிறார் உமாசங்கர். இது தொடர்பாக உமாசங்கரைத் தொடர்பு கொண்டபோது,

''நான் சொல்ல வேண்டியதை நீதிமன்றத்தில் சொல்லவிட்டேன். முறைப்படி தொடரப்படும் எந்த விசாரணையையும் சந்திக்க நான் தயாராகவே இருக்கிறேன்'' என்கிறார் அவர். இந்த நிலையில், மக்கள் சக்தி கட்சி என்ற அமைப்பு, நேர்மையான அதிகாரி பழிவாங்கப்படுவதாக ஆர்ப்பாட்டம் செய்யத் தயாரானது. ஆனால், காவல்துறை அதிகாரிகள் ''செம்மொழி மாநாடு நடைபெறும் இந்தச் சமயத்தில் வேண்டாம்'' என்று சொன்னதால் ஆர்ப்பாட்டம் ரத்தாகிவிட்டதாம்.

''இதுபோன்ற நேர்மையான அதிகாரிகள் பழிவாங்கப்பட்டால், அது இளைஞர்களுக்குத் தவறான செய்தியைக் கொண்டு சேர்க்கும். கடந்த சில வருடங்களாக நிறைய இளைஞர்கள் தமிழ் நாட்டிலிருந்து ஐ.ஏ.எஸ்.பணிக்கு தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அவர்களில் பலர் உமாசங்கர் போன்றவர்களை லட்சிய அதிகாரியாக நினைக்கிறார்கள். அவரே பழிவாங்கப்பட்டால், இந்தப் பணியில் சேர இளைஞர்களுக்கு ஆர்வம் குறைந்துவிடும். இதுதவிர, அரசு கேபிள் கார்ப்பரேஷனுக்கு இதுவரை 300 கோடி செலவாகியிருக்கிறது. ஆனால், அது முடங்கிய நிலையிலேயே இருக்கிறது. ஒரு குடும்ப அரசியலில் இத்தனை கோடி வீணாக்கப்பட்டதையும் எதிர்த்துதான் ஆர்ப்பாட்டம். அது விரைவில் நடக்கும்'' என்கிறார் மக்கள் சக்தி கட்சியின் பொறுப்பாளர் செந்தில் ஆறுமுகம். உமாசங்கர் பழிவாங்கலில், இ.டி.எல் நிறுவனத்தை ஹைஜாக் செய்தவர்களின் பங்களிப்பும் இருப்பதாகச் சொல்கிறார்கள்.

**- ப்ரியன்**

# திருக்குறள் மணிக்கூண்டு



• திருவாசகம் • பாஷா

மெரினா கடற்கரையோரம், பேரறிஞர் அண்ணா நினைவிடம் பக்கம் செல்பவர்கள், அங்கே ஒரு மணிக்கூண்டு இருப்பதையே கவனித்து இருக்கமாட்டார்கள். சென்னைப் பல்கலைக்கழகத்தின் தலைமேல் இருக்கும் மணிக்கூண்டு, பல ஆண்டுகளாக ஓடவும் இல்லை, மணியெழுப்பவும் இல்லை.

இப்போது அப்படியில்லை. ஒவ்வொரு மணி நேரமும் கணீரென்று ஒலியெழுப்பும் மணிக்கூண்டு. கூடவே திருக்குறளையும் கூறி, அதன் பொருளையும் சொல்கிறது.

''மெட்ராஸ் யூனிவர்சிட்டி வி.சி. திருவாசகத்தோட ஐடியாதான் இது. நாங்க அதை அப்படியே செஞ்சுக் கொடுத்தோம்'' என்று பேச ஆரம்பித்தார் எம்.அப்துல்லா பாஷா. டைம் கண்ட்ரோல் டிவைசஸ் நிறுவனத்தைச் சேர்ந்த பாஷா, இருபது ஆண்டுகளாகப் பல்வேறு வகை கடிகாரங்களை ஓட வைப்பதில் கெட்டிக்காரர்.

சென்னையில் உள்ள ஐம்பது அறுபது தேவாலயங்களின் மணிகளை ஒலிக்கச் செய்திருப்பவர் பாஷா. ''சர்ச்சுல மணி அடிச்சுட்டு, பைபிள் வசனம் சொல்லும். அதையெல்லாம் டிஜிட்டல் முறையில செஞ்சுக் கொடுத்தது நாங்கதான்'' என்கிறார் அவர்.

''மணியடிச்சவுடன் திருக்குறளைச் சொல்ல வைக்க முடியுமான்னு துணைவேந்தர் கேட்டார். உடனே ஒரு சாம்பிள் செஞ்சு காண்பிச்சோம். அவருக்கு ரொம்ப பிடிச்சுப் போச்சு. அப்புறம் நூறு குறள் வரை, இப்படிச் சொல்ல வைக்கலாம்னு நினைச்சோம். பின்னால, எல்லாக் குறளையும் பொருளோடு சொல்ல வெச்சிருக்கோம்.''

''மொத்த குறள்களையும் பொருளையும் ஒரு யுஎஸ்பி டிரைவ்ல சேமிச்சுட்டோம். டிஜிட்டல் மணி அடிச்சவுடனே, அதுலேருந்து ஒரு அவுட்புட் இங்கே வரும்; உடனே குறள் ஆரம்பிச்சுடும். டிஜிட்டல்ல எல்லா சித்துவேலையும் செய்யலாம்'' என்றார் பாஷா.

கோவை புது பஸ் ஸ்டாண்டில் உள்ள மணிக் கூண்டையும் பாஷா கையில் எடுத்திருக்கிறார். செம்மொழி மாநாடு முடிந்ததும் விரைவில் கோவையில் எல்லோரும் திருக் குறளோடு கண்விழிக்கப் போகிறார்கள்.

– ஆர்.வெங்கடேஷ்



## பயாஸ்கோப்

### புன்னகையரசி ஐ.பி.எஸ்.

ஒரு போலீஸுக்கே உரிய விம்பும் விறைப்புமாகத் திரிகிறார் புன்னகை இளவரசி சிநேகா. வைஜெயந்தி ஐ.பி.எஸ்., பவானி ஐ.பி.எஸ்ஸாக ரீமேக் ஆகிக் கொண்டிருக்கிறது என்பது பழைய கதை. பவானி ஐ.பி.எஸ்.ஸாக நடிக்கும் சிநேகா, இப்போதெல்லாம் துப்பாக்கியும் கையுமாகத்தான் இருக்கிறார். கேட்டால், "கேமராவுக்கு முன்னாடி மட்டும் துப்பாக்கிப் பிடிச்சிட்டு மத்த நேரங்கள்ல விட்டுட்டா டச் விட்டுடும். அதனால்தான்" என்று பதிலால் பட்டென்று சுடுகிறார்.





### அகராதி மழை

"அகராதி வரட்டும் அப்புறம் என் காட்டுலதான் அடைமழை" - இது மோனிகா பட்சியின் ஸ்டேட்மெண்ட். புலிகேசியில் வடிவேலுவோடு ஹீரோயின் வேடம் கட்டிய அம்மணிக்கு அதுக்கு அப்புறம் இறங்கு முகம்தான். அகராதி தூக்கி நிறுத்தும்னு நம்புறார். அப்படியா...? டைரக்டர் நாகா வெங்கடேஷிடம் கேட்டால், "பணம்தான் படத்தோட மெயின் கான்செப்ட், அதை வெச்சுக்கிட்டுப் பாதாளம் வரைக்கும் பாஞ்சுருக்கோம்" என்கிறார்.

—மகிமைராஜன்

## 'ரெடி'ன்னா உத்தமபுத்திரன்!



தெலுங்கில் 'ரெடி'ன்னா, தமிழ்ல உத்தமபுத்திரன்னு அர்த்தம். என்ன குழப்பமா இருக்கா? தெலுங்குல சூப்பர் டூப்பர் ஹிட்டான 'ரெடி' படத்தைத்தான் தமிழ்ல 'உத்தமபுத்திரன்'ங்கிற பேர்ல இயக்கறாங்க பாஸ். "இரண்டாவது புத்திரன் பிறந்த நேரத்தில் உத்தமபுத்திரன் ஹிட்டாகும்னு" ஏகப்பட்ட நம்பிக்கையோட திரியுறாம் தனுஷ் தம்பி. வெள்ளி விழா கண்ட 'யாரடி நீ மோகினி' படத்தை இயக்கிய மித்ரன்.கே.ஜவஹர்தான் இந்தப் படத்தையும் இயக்குறார் என்பது தனுஷுக்குக் கூடுதல் தெம்பு.

## சமீராவுக்குள் ஸ்டண்ட் கேமரா!



இனி தமிழ்ப் படங்களை இயக்கப் போவதில்லை என்று அறிவித்திருந்த இயக்குநர் கௌதம் வாசுதேவ் மேனன், சத்தம் போடாமல் ஒரு தமிழ்ப் படத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார். அந்தப் படம் ஆக்ஷனையும் த்ரில்லையும் இழைத்து இழைத்துப் பின்னப்படுகிறதாம். 'விண்ணைத் தாண்டி வருவாயா?' கேமராமேன் மனோஜ் பரமஹம்சாதான் இந்தப் படத்துக்கும் கேமராமேன். 'வாரணம் ஆயிரம்' சமீரா ரெட்டிதான் ஹீரோயின். ஆக்ஷனும், த்ரில்லும் தத்ரூபமாகப் பதிவாக வேண்டுமென்பதற்காக, சமீராவின் மூக்கின் நுனியிலும் கூந்தலிலும் உயர் தொழில்நுட்பம் கொண்ட கேமரா பொருத்திப் படம்பிடித் திருக்கிறார்களாம். ஸோ, சமீராவுக் குள் ஸ்டண்ட் கேமரா!



''அமைச்சர் பேசினப்ப மக்கள் பலமா கைதட்டினாங்களாமே?''

'' 'லோன் மேளா'வில் கலந்துக்கற நான், தலைவர் ஆணைப்படி 'லோன் தள்ளுபடி' மேளாவிலும் விரைவில் கலந்துப்பேன்னு பேசினா கைதட்டாம என்ன செய்வாங்க?''

- சு.கலியபெருமாள்



''காக்காவும் பணமும் ஒண்ணு தான்னு எப்படிச் சொல்றீங்க?''

''இரண்டுமே கரையுதே!''

- ப.உமாமகேஸ்வரி

''இவ்வளவு நேரம் நீங்க பேசினதல, ஒண்ணே ஒண்ணு மட்டும்தான் தலைவரே உண்மை!''

''எது?''

''கடைசில நான் சொன்னதெல்லாம் 'பொய் ஸார் உண்மை' ன்னு சொன்னீங்களே அதுதான்!''

பி. உமாமகேஸ்வரி





''எங்க ஆஃபீஸ்ல வேலை செய்யறவங்களுக்கு ஒரு கஷ்டம்னா உடனே லோன் கொடுப்பாங்க.''

''அப்ப உங்க கல்யாணத்துக்கு லோன் வாங்கினீங்களா?''

- வி.சாரதிடேச்சு



''டாக்டருக்கு எதுக்கு குளுகோஸ் ஏத்துறாங்க?''

''பேஷண்ட் யாரும் வரலைன்னா டாக்டர் ரொம்ப டல்லாயிடுவார்.''

- அம்பை தேவா



''மாமூலை ஏன் குறைச்சுக் கொடுக்கிற?''

''தொழில் வரி பிடிச்சுருக்கேன் எசமான்''

- அம்பை தேவா



# கண்டறியாதன கண்டேன்

ஆலய அமைப்பில், கொடிமரத்தை அடுத்து பலி பீடத்தையும் நந்தியையும் தரிசிக்கிறோம். பரிவார தேவைதைகளுக்கான நிவேதனத்தை அளிக்கும் பகுதி, பலிபீடம். அது மட்டும்தானா?

'கர்வம், வெறுப்பு, பொறாமை, சினம்... என்று, உன் மனத்துக்குள் மண்டியிருக்கும் சுமைகளை / இருளை இங்கே பலியிட்டு விடு. மனத்தை வெறுமையாக்கிக்கொண்டு உள்ளே செல்.

வெறுமையான (காலி) பாத்திரம்தான் நீரை முகந்திட உவுகிறது. உள்ளீடில்லாத குழல்தான் நாதம் எழுப்புகிறது. உன்னையும் அப்படி ஆக்கிக் கொள். உனக்குள்ளும் இறையருள் நிரம்பும்' என்று உணர்த்துகிறது பலிபீடம்!

பலி பீடத்தை அடுத்து, காட்சியளிக்கிறார் நந்திதேவர். சிவபிரானின் அணுக்கத் தொண்டரான இவர்தான், சந்தானாச்சார்ய மரபின் முதல்வர்; புஷ்பக விமானத்தில், கயிலை மீது பறக்க முனைந்த ராவணனைத் தடுத்தவர்; 'குரங்கே, என்னைத் தடுக்க நீ யார்?' என்று சினந்த ராவணனுக்கு, 'குரங்குளால் உன் தேசத்துக்கு அழிவு வரும்' என்று சாபம் கொடுத்தவர்!

4

இந்த நந்தி தேவரின் தலையில், இரு கொம்புகளுக்கு நடுவேதான், பிரதோஷ காலத்தில் சிவபிரான் நடனம் ஆடுகிறார். அப்படி ஆடும் பிறைசூடியை நம்மால் நேர்முகமாகத் தரிசிக்க முடிய வில்லையே என்பதற்காகத்தான், 'நந்தியின் கொம்புகளின் நடுவே சிவ தரிசனம் செய் யுங்கள்' என்று முன்னோர்கள் வழிபடுத் தினார்கள்.

கால்களை மடக்கி அமர்ந்த கோலத்தில் காட்சி தரும் நந்திதேவர், பெரும் தத்துவம். அவருடைய பார்வை மூலவரின் மீதே படிந்திருக்கும். 'புற ஒலிகளால், செயல்களால் பாதிப்படையாத வண்ணம், உன்னுடைய பார்வை எப்போதும் பரமனி டம் லயித்திருக்கட்டும்; எண்ணங்கள் அவனிடமே படிந் திருக்கட்டும்' என்று உணர்த்துகிறார் நந்தி தேவர்.

# ராவணனைச் சபித்த நந்தி!

'தொடர்ந்து மூன்று பிரதோஷங்கள் மனமொன்றி வழிபட்டால், விருப்பங்கள் கைகூடும்' என்பது வழக்கு. அப்படி யென்ன சிறப்பு? உலக ஜீவன்களின் நலன் கருதி, பாற்கடலில் இருந்து வெளிப் பட்ட ஆலகால விஷத்தைத் தானேற்றுப் பருகினார் பரமன். பலரின் நலன் வேண்டி, பனிமுடிப் பெருமான் வெளிக்காட்டிய பரிவு; தானேற்ற தியாகம்! அப்படி விஷத் தைப் பருகிய பெருமான்தான், சுருட்டைப் பள்ளியில் பள்ளி கொண்ட கோலத்தில் தரிசனம் அருள்கிறார். இதே சயனக் கோலத்தை, காசியில் உள்ள காமகோடீஸ்வரர் ஆலயத்திலும் தரிசிக்கலாம்.

'ஒரு காரியத்தை ஆரம்பிச்சோம். முடிச்சோம்னு இல்லை. ஏதாவது ஒரு நந்தி குறுக்கே வந்துடறது' என்று வழக்கில் சொல்வார்கள். தடை வருகிறது என்பதை இப்படிக் குறிப்பிடுவார்கள். ஆனால், நாம் நந்தனாய் இருந்துவிட்டால், நந்தி விலகிக் கொள்ளும்.

ஆதனூரில், தாழ்த்தப்பட்ட குலத்தில் பிறந்த நந்தனார், சிவலோக நாதரிடம் இணையற்ற பக்தி கொண்டிருந்தார். ஆனாலும், ஆலயத்தினுள் எழுந்தருளி யுள்ள பரமனின் திருவுருவைத் தரிசிக்க முடியவில்லை. அதையெண்ணி உள்ளில் உருகினார். அந்தப் பக்தியில், தழ லான திருமேனிப் பரமனும் குளிர்ந்தான். 'சற்றே விலகியிரும் பிள்ளாய்' என்று நந்தியை நகரச் செய்தான்; நந்தனார் என்னும் திருநாளைப் போவாருக்குத் தரிசனம் அளித்தான். வைத்தீஸ்வரன் கோயில் அருகிலுள்ள திருப்புன் கூரின் விலகிய நந்தி, இன்றும் நமக்குச்

ஸ்ரீநிவாச ராகவன்

சாட்சி!

இந்தத் திருப் புன்கூரில் இன்னொரு சுவாரஸ்யம் உண்டு. இத னருகே உள்ள பெருமங்கலத்தில் வாழ்ந்தவர் ஏயர்கோன் கலிக்காம நாயனார். ஒருமுறை அங்கு நிலவிய கடும் வறட்சியின்போது, 'மழை பொழியச் செய்; 12 வேலி நிலம் அளிக்கிறேன்' என்று சிவனைப் பிரார்த்தித்தார். மழை பெய்தது; ஆனால் நிற்கவேயில்லை. 'மழையை நிறுத்து; இன்னொரு 12 வேலி நிலம் தருகிறேன்' என்று கலிக்காமர் வேண்ட, மழை நின்றதாம். சேக்கிழார் இதைப் பெரிய புராணத்தில் சொல்ல வில்லை. ஆனால், சுந்தரர் தம் தேவாரத் தில் பதிவு செய்கிறார்:

''...பெய்யுமாமழைப் பெருவெள்ளம்
தவிர்த்துப் பெயர்த்தும்
பன்னிரு வேலி கொண்டருளும்
செய்கை கண்டு நின் திருவடி
அடைந்தேன் செழும்பொழில்
திருப்புன்கூர் உறையுளானே...''

ஆக, மழை பெய்யப் பன்னிரண்டு; மழை நிற்கப் பன்னிரண்டு என்று இருபத்தி நான்கு வேலி நிலம் பெற்றார் திருப்புன்கூர் பெருமான்.

விலகிய, நந்தியைத் திருப்புன்கூரில் பார்த்தோம் என்றால், வாசலை நோக்கும் நந்தியைப் பல தலங்களில் காணலாம். தேவகன்னியர், காமதேனு, வெள்ளை யானையான ஐராவதம் ஆகியோர் பூஜித்த தலம் பெண்ணாகடம் (பெண்+ஆ+கடம்), இவற்றில் ஒன்று. இதை 'தூங்கானை மாடம்' என்றும் குறிப்பிடுவர். விருத் தாசலத்தை அடுத்த திட்டக்குடியில் இருந்து 15 கி.மீ தொலைவில் இருக்கிறது பெண்ணாகடம். இங்குதான் நாவுக்கரசருக்கு ரிஷப முத்திரையும், சூல முத்திரையும் பதித்தருளினார் சிவபிரான். பொங்கி யெழுந்த பிரளய வெள்ளத்தை அடக்கு மாறு சிவபிரான் ஆணை யிட, நந்தி அந்த வெள்ளத்தை அடக்கினார் என்பது புராணம். அத னாலேயே, பிரளயம் காத்த நந்தி, இங்கே வாயிலை நோக்கியவாறு வீற்றிருக் கிறார்.

அதைப் போன்றே, சென்னையை அடுத்த திருமுல்லைவாயில் மாசிலாமணீஸ் வரர் ஆலயத்திலும், ஞான சம்பந்தர் பதிகம் பாடி, ஆண் பனைகளைப் பெண் பனை களாக்கிய திருவோத்தூர் என்னும் இன்றைய செய்யாறு சிவாலயத்திலும், வாயிலை நோக்கியே நந்தி தேவரைத் தரிசிக்க லாம்.

**நந்தியின் கீர்த்தியை ஒளிரச் செய்யவே திருவையாற்றில் ஆண்டுதோறும் நடக்கிறது சப்தஸ்தானவிழா!**

நந்திப் பெருமானின் பெரிய திருவுரு என்று சொன்னால், மாமன்னன் ராஜராஜன் எழுப்பிய தஞ்சை பெரிய கோயில் நினைவுக்கு வரும். அதைப் போன்றே, ஸ்ரீராமன் பூஜித்த தலம்; ஜோதிர் லிங்கத் தலம் என்று புகழ் பெற்ற ராமேஸ்வரமும் நினைவுக்கு வரும். இவற்றைப் போன்றே திருவாவடுதுறையிலும் மிகப் பெரிய

நந்தியைக் காண லாம். பசு வடிவில் உமையவள் பூஜித்ததால் உண்டான பெயர் இது. திரு மூலர், திருமாளிகைத் தேவர் போன்ற மகான்கள் உலவிய ஸ்தலம் இது; இவர்களுக்கும் இங்கே சன்னிதி உண்டு.

பழங்கால எருமையூர்- வடமொழியில் மகிஷ ஊர் என்ற மைசூரில் நந்தி மலை யில்தான், ஸ்ரீ சாமுண்டீஸ்வரி கோயில் கொண்டிருக்கிறாள். இங்கும் மிகப் பெரிய நந்தியைத் தரிசிக்கலாம். கைலாய யாத்



திரையில், நந்தி பர்வதத்தில் ஏறித் தீபாரதனை செய்வது தனிச்சிறப்பு. ஆந்திர மாநிலம் நந்தியால் அருகே உள்ளது மஹா நந்தி திருத்தலம். சுமார் 15 கி.மீ. தூரத்துக் குள் ஒன்பது நந்திகளை இங்கே தரிசிக்க லாம். 'நவநந்தி தரிசனம்' இங்கே விசேஷ மான யாத்திரை!

**த**ம்மைச் சார்ந்தேயிருக்கும் இந்த நந்தியை, சிலாத முனிவரின் மகனாகப் பிறக்கச் செய்தான் பெருமான்; நன்கு வளர்ந்த பின், வியாக்ர பாத முனிவரின் மகளான 'ஸ்வயம் பிரகாசை' என்ற பெண்ணை மணம் செய்வித்தான். அதை எளிமையாகச் செய்ய வில்லை; 'ஏழூர்த் திருவிழா' என்று எடுப் பாக நடைபெறச் செய்தான்.

ஐயாறப்பரும், அறம் வளர்த்த நாயகியும் கோயில் கொண்டுள்ள திருவையாற்றின் சிறப்பு வாய்ந்த விழா இது. திருமழபாடியில் நடைபெற்ற இந்தத் திருமண வைபவத் துக்கு திருவேதிக்குடியில் இருந்து வேதி யர்கள் வந்தார்கள்; திருக்கண்டியூரில் இருந்து கண்டிகை முதலான அணிகலன் கள் வந்தன; திருப்பழனத்தில் இருந்து பழங்கள் வந்தன; திருநெய்த்தானம் என் கிற தில்லை ஸ்தானத்தில் இருந்து நெய் உள்ளிட்ட திரவியங்கள் வந்தன. திருப்பூந் துருத்தியில் இருந்து பூக்கள் வந்தன. திருச்சோற்றுத் துறையில் இருந்து உணவுப் பொருட்கள் வந்தன. இந்த ஏழு ஊர் களுக்கும் நந்தி தேவருடன் ஐயாறப்பரும் எழுந்தருளி நன்றி தெரிவிக்கும் விழாதான், புகழ் பெற்ற சப்தஸ்தான விழா!

இறைவன் நம்மிடம் கடன்பட்டவனா கிறான். எப்போது? நல்ல பக்தனுக்கு நாம் தொண்டு செய்யும்போது! அந்தப் பக்தனின் பொருட்டு, நம்மிடம் நன்றி தெரிவிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இறை வனுக்கு ஏற்படுகிறது. அதனால்தான், 'ஆண்டவனைப் பழித்தாலும் அடியார் களைப் பழிக்காதே' என்று அறிவுறுத் தினார்கள் பெரியோர்கள். சேக்கிழார் பெரு மானோ, 'திருத்தொண்டர் புராணம்' என்று பெருமைப்படுத்தினார். ஔவை பெரு மாட்டியோ, 'தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே?' என்று வியந்து சொன்னாள். அந்தத் தொண்டனின் பெரு மையை விளங்கச் செய்வதாகவே, நந்தி யின் கீர்த்தியை ஒளிரச் செய்வதாகவே திருவையாற்றில் ஆண்டுதோறும் நடை பெறுகிறது சப்தஸ்தான விழா!

***(அடுத்த வாரம் - மண்டபம்)***

# கல்விக்கு நன்கொடை ; வாழ்க்கைக்கு வழித்துணை !



* இராஜலட்சுமி



* தரணிதரன்



* கஸ்தூரி

**சி**வகாசி அய்ய நாடார் - ஜானகி அம்மாள் கல்லூரி தமிழ்த் துறையில் எம்.ஃபில் பயின்று வருகிறேன். சென்ற ஆண்டு முதுகலைத் தமிழில் 78 சதவிகிதம் மதிப்பெண் பெற்றேன். நான் ஏழைமையான குடும்பத்தைச் சேர்ந்தவள். உடல் ஊனமுற்றவள். பலரின் உதவியைப் பெற்றுத்தான் கல்வியைத் தொடர்கிறேன்...

**- கிளியம்பட்டி சௌ.இராஜலட்சுமி**

**வி**ழுப்புரத்திலிருந்து சென்னை வந்து மாணவர்களுக்கான இலவச விடுதியில் தங்கி, ஜெயா கல்லூரியில் பி.எஸ்ஸி., முதலாம் ஆண்டு படித்து வருகிறேன். சென்ற தேர்வில் 78 சதவிகிதம் மதிப்பெண் பெற்றேன். என் தந்தையின் மாத வருமானம் ரூ.1,500 மட்டுமே. எனக்கு உதவித் தொகை வழங்கி ஆதரிக்கக் கோருகிறேன்.

**- சென்னை-78, ச.தரணிதரன்**

**ப**த்தாம் வகுப்பில் 500க்கு 448 மதிப்பெண் பெற்றுத் தற்போது 11ம் வகுப்பில் படித்து வருகிறேன். என் தந்தை கூலி வேலை செய்கிறார். தாயாருக்கு உடல் நிலை சரியில்லாததால் வேலைக்குப் போக முடியவில்லை என்பதோடு செலவும் கூடுகிறது... எனது கல்விக்கான உதவித் தொகை வழங்கக் கோருகிறேன்.

**- புதுச்சேரி, இரா.கஸ்தூரி**

**க**ல்வி நிலையத் தலைவரின் சான்றிதழுடன் சென்ற ஆண்டு பெறப்பட்ட ஆயிரக்கணக்கான விண்ணப்பங்களில், மாதிரிக்கு மூன்று மட்டும் தரப்பட்டுள்ளன. ரூ.4,10,000 உதவித் தொகையாக விநியோகமாகும் என்று அறிவிப்பு செய்திருந்தபோதிலும், கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை ரூபாய் ஐந்து லட்சத்துக்கும் அதிகமாக விநியோகித்தது. பொருளாதாரத்தில் நலிந்த-படிப்பில் சிறந்த மாணவர்கள் கவனமுடன் தேர்வு செய்யப்பட்டனர்.

**இ**ந்த நற்பணியில் பங்கேற்க விரும்பும் கல்கி அன்பர்கள், தங்களால் இயன்ற அளவில் நன்கொடையை செக், டிராஃப்ட் அல்லது மணியார்டர் மூலம் KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST என்ற பெயருக்கு அனுப்பலாம். ரூபாய் ஆயிரம் அல்லது அதற்கு அதிகமான நன்கொடை வழங்குவோர் மூலதன நிதிக்கு (corpus fund) வழங்குவதாகக் கடிதம் எழுதவும். அத்தகைய நன்கொடைகள் முதலீடாகி அதிலிருந்து கிடைக்கும் வருவாய் நிரந்தரமாக மாணவ மாணவியருக்கு உதவித் தொகைகள் வழங்கப் பயன்படும். நன்கொடைகளுக்கு 80G பிரிவின் கீழ் வருமான வரி விலக்கு உண்டு. நன்றி.

**கல்கி ராஜேந்திரன்**
(நிர்வாக அறங்காவலர்)


விலாசம்:
**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை, புது எண் 14, நான்காவது பிரதான சாலை, கஸ்தூர்பா நகர், சென்னை-600 020.**

சமகால ஆக்ஷன் த்ரில்லராக உருவாகி இருக்கும் ஹாலிவுட் படம் சால்ட். ஏஞ்செலினா ஜோலி சால்ட்டாக நடிக்க பிலிப்நாய்ஸ் இயக்கியிருக்கிறார். கொலம்பியா பிக்சர்ஸ் தயாரித்து இருக்கும் படத்தை உலகெங்கும் சோனி பிக்சர்ஸ் வெளியிடுகிறது. 'சால்ட்' படத்தின் பெரும்பலமே ஏஞ்செலினா ஜோலிதான்.

அமெரிக்க அதிபரைக் கொலை செய்ய ரஷ்யாவிலிருந்து உளவாளிகள் தலைநகருக்குள் நுழைந்து விட்டதாக நாட்டு மக்களிடம் தகவல் தீயாய்ப் பற்றிக்கொள்கிறது. ரஷ்ய உளவாளிகளின் ஏஜெண்ட் ஏஞ்செலினா ஜோலிதான் என்கிற பழி வருது.

இப்படி முகத்துக்கு நேராகவே தேசத் துரோகப் பழிவிழுந்தால் என்ன செய்வாள் சால்ட்? கைதாவதோ, குற்றவாளிக் கூண்டில் நிற்பதோ, நாட்டுக்காக உயிர் விடுவதோ பெரிதல்ல. தன் மீதுள்ள அவப்பெயரை, களங்கத்தை முதலில் துடைக்க வேண்டும் என்று சிலிர்த்து எழுகிறாள், ஓடுகிறாள். ஓடிக் கொண்டே இருக்கிறாள். தன்னை ஒரு நிரபராதி என்று நிருபிக்க, அவள் செய்யும் போராட்டங்கள், சாகஸங்கள் பரபரப்பான திருப்பங்கள். இப்படித்தான் போகிறதாம் 'சால்ட்' படக்கதை.

ஜோலி, பலமுறை கனவுக் கன்னிகளில் டாப் ரேங்கில் வலம்வந்தவர். மிகச் சிறந்த நடிகை என்கிற விருதும் பெற்றவர். தன் 11-வது வயதிலேயே தியேட்டர் இன்ஸ்டிடியூட் என்கிற நடிப்புப் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து 16வது வயதிலேயே மாடலிங் துறையில் ஈடுபட்டவர். ஆரம்பத்தில் இசை வீடியோக்களில் தலைகாட்டினார். ஹாலிவுட்டில் 'Lara Croft' வரிசையில் வந்த படங்கள் மிகப் பெரிய நட்சத்திர அந்தஸ்தைத் தேடிக் கொடுத்தன. அதன் பிறகு இவரது வளர்ச்சி ராக்கெட் வேகத்தில் உயர்ந்தது.

இவர் ஆஸ்கார், எம்மி, கோல்டன், குளோப் (3முறை) போன்ற 60க்கும் மேற்பட்ட விருதுகளைக் குவித்தவர். A Mighty Heart படத்துக்காக மிகச் சிறந்த நடிப்புக்கான விருதான 'Outstanding Performance Award'ஐ 2008-ல் பெற்றவர்.

ஜோலி A Place in Time என்கிற படத்தின் இயக்குநரும் கூட.

தீப்பொறி பறக்க வரும் 'சால்ட்' ஜூலை மாதம் தமிழிலும் வெளியாகிறது.

- மகிமைராஜன்



# ஏஞ்செலினா (ஸ்) சால்ட்!

"ஒரு கட்டமைப்பைக் கட்டும் போதுதான் தண்ணீர் அதற்கு நண்பன். கட்டி முடிக்கப்பட்ட பின்னர், அதனருகில் தேங்கி நிற்கும் தண்ணீரே எதிரி. எனவே, ராஜகோபுரக் கட்டுமானத்தின் சுற்றிலும் தண்ணீர் தேங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்கிறார் இந்து அறநிலைத் துறையின் தலைமை ஸ்தபதி முத்தையா. "தமிழக அரசு உத்தரவிட்டதன் அடிப் படையில், ஸ்ரீரங்கம் கோயில் ராஜகோபு ரத்தை ஆய்வு செய்துள்ளோம். கோபுரத்தி லிருந்து பத்து மீட்டர் சுற்றளவுக்கு எவ்விதக் கட்டடங்களும், ஆக்கிரமிப்பு களும் இருக்கக் கூடாது. அவை அகற்றப் பட வேண்டும்!'' என்றும் கூறினார்.

சென்னை ஐ.ஐ.டி. கட்டட வடிவமைப்புத் துறைப் பேராசிரியர்கள் உட்படப் பத்து பேர் கொண்ட ஆய்வுக் குழுவினர் ராஜகோபுரப் பகுதிகளை நேரில் ஆய்வு செய்தனர்.

''பதினெட்டு ஆண்டுகளாக ஸ்ரீரங்கம் ராஜகோபுரத்தில் தொடர்ந்து விரிசல்கள் உண்டாகி வருவதால், காளஹஸ்தி போல இங்கும் ஆகிவிடுமோ என்கிற எதிர்கால எதிர்மறை (நெகட்டிவ்) எண்ணம் எவருக் கும் எழத்தான் செய்யும்!'' என்கிறார் ஸ்ரீரங்கம் நகர்நலச் சங்கத்தின் ஒருங்கி ணைப்பாளர் திருவேங்கடம் யாதவ்.

இரட்டைச் சுவர் கட்டுமான அடிப் படையில் கட்டப்பட்ட ஸ்ரீரங்கம் கோயில் ராஜகோபுரம், சுமார் நானூறு ஆண்டுகளாக மொட்டைக் கோபுரம். அந்தப் பழைய கல்காரத்தின் மீது, புதிதாக இருநூற்றுப் பதினொன்று அடி உயரத்துக்கு பெரிய கட்டுமானம் கட்டப்பட்டுள்ளது. அதன் பெருஞ்சுமையால், அடித்தளப் பீடக் கல் கட்டுமானத்தின் மீது கல் பிதுங்கல்கள் உண்டாகி, சிற்சில இடங்களில் விரி சல்கள் ஏற்பட்டுள்ளன. இதனால் பீதி அடையக்கூடிய வகையில் பாதிப்பு ஏதுமில்லை!'' என்கிறார் ஸ்தபதி முத்தையா.

"எங்களது ஆய்வறிக்கையைப் பதி னைந்து நாட்களில் தமிழக அரசிடம் தாக்கல் செய்வோம். இராஜகோபுர



# அரங்கன் கோபுரத்துக்கு

அடி பீட கல் கட்டுமான விரிசல்களைச் சரி செய்வது குறித்தும், மேலும் விரிசல்கள் பரவாமல் இருக்கச் செய்ய வேண்டியது பற்றியும் வல்லுநர்களுடன் கலந்தாலோசித்து முடிவுகள் தீர்மானிக்க உள்ளோம்!'' என்கிறார் சென்னை ஐ.ஐ.டி. கட்டட வடிவமைப்புத் துறைப் பேராசிரியர் மெகர் பிரசாத்.

''1992-ல் விரிசல்கள் ஆய்வு செய்யப்பட்டு, கண்ணாடித் துண்டுகள் ஒட்டப்பட்டன. அப்போது வல்லுநர் குழு தந்த அறிக்கையின் அடிப்படையில், இதுவரை எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இது குறித்துத் தமிழக முதல்வருக்கு நாங்கள் புகார் மனு அனுப்பியிருந்தோம். இராஜ கோபுர விரிசல்கள் சீர் செய்யப்படும்; அதன் பத்து மீட்டர் தூரத்து ஆக்கிரமிப்புகள், மாவட்ட நிர்வாக நடவடிக்கை மூலமாக அகற்றப்படும் என்று கோயில் நிர்வாகம் எங்களுக்குப் பதில் அனுப்பி வைத்துள்ளது!'' என்கிறார் திருச்சி, அமிர்தம் சமூக சேவை அறக்கட்டளை அறங்காவலரும் வழக்கறிஞருமான சித்ரா விஜயக்குமார்.


சித்ரா விஜயகுமார்


மெகர் பிரசாத்


சிவபதி முத்தையா


சுரேஷ்

''ஆய்வுக் குழுவினர் கோபுர விரிசல்களை நேரில் பார்த்தனர். அதனைச் சரி செய்வது பற்றி ஏதும் சொல்லவில்லை. 'அடித்தளக் கல்' கட்டுமானத்தில் விரிசல்கள் உள்ளன. ஆனால், அதன் மீதான இராஜகோபுரத்தில் எவ்வித விரிசலும் இல்லை. உறுதியாகவே உள்ளது' என்கின்றனர் ஆய்வுக் குழுவினர். இது எப்படி இருக்கிறது என்றால், சினிமாவில் வடிவேலு பாணியில் 'பில்டிங் ஸ்ட்ராங்; பேஸ்மென்ட் வீக்' என்கிற மாதிரி உள்ளது!'' என்கிறார் ஸ்ரீரங்கம் சிட்டிசன்ஸ் அசோசியேஷன் தலைவர் பெரியார் நகர் சுரேஷ்.

அரங்கன்தான் காப்பாத்தணும்!

- ஸ்ரீரங்கம்
திருநாவுக்கரசு

# ஆபத்து?





## முதல் பரிசு குறும்படம்

"**நா**ன் இந்தப் போட்டியில் பார்த்த குறும்படங்களிலேயே என்னை மிகவும் கவர்ந்தது நலன் இயக்கிய 'நெஞ்சுக்கு நீதி' " என்று பாராட்டினார் இயக்குநர் ஷங்கர். கலைஞர் டீ.வி.யில், 'நாளைய இயக்குநர், குறும்படப் போட்டியில் முதல் பரிசையும், பார்வையாளர்களின் கைதட்டலையும், பாராட்டையும் பெற்ற குறும்படம் இது.

இந்த நாட்டில் ஏழைகளின் உயிர் எவ்வளவு மலிவாக நடத்தப்படுகிறது என்பதையும், மனச்சாட்சி இல்லாத கார்ப்பரேட் மருத்துவமனைகளின் முகத்தையும் வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது இந்தக் குறும்படம்.

''ஏழைகளின் உயிர், உடல் உறுப்புகள் பணக்காரர்களுக்கு வெறும் Commodity (பொருள்); பணம் கொடுத்தால் எதையும் வாங்கி விடலாம் என்ற மேல் தட்டு மக்களின் ஆணவப் போக்கை விளக்கவே நெஞ்சுக்கு நீதியை எடுத்தேன். சட்டம், வழக்கு என்பதையெல்லாம் தாண்டி இயற்கையின் நீதி தவறு செய்பவர்களைத் தண்டிக்கும் என்பதே மையக் கருத்து'' என்கிறார் நலன்.



* நலன்

எஸ்.பி.மோகன் இயக்கிய ''தபேலா வாசித்த கழுதை'' என்ற குறும்படத்துக்கு, ஒட்டுமொத்தமாக சிறந்த குறும்படம் (Total Series Award) விருது கிடைத்தது. எழில்வரதன் எழுதிய 'சொப்பனத்தில் தபேலா வாசித்த கழுதை' என்ற கதையை மையமாக வைத்து எடுக்கப்பட்டது இந்தப் படம்.

*நெஞ்சுக்கு நீதி குறும்படத்தின் கதைச் சுருக்கம்...*

கதையின் நாயகன் கருணாகரன் (நிஜப் பெயரும் இதுதான்) சாலையோரப் பொம்மை வியாபாரி. ஒருநாள் காலைப் பொழுதில் இரண்டு குழந்தைகள் கருணாவிடம் பொம்மைகள் வாங்குகின்றன. வியாபாரம் செய்து கொண்டிருக்கும் போதே சிலர் காரில் வந்து இறங்குகிறார்கள்.

''நீங்கதானே கருணா, எங்க பாஸுக்கு நீங்கதான் போன வாரம் இரத்தம் கொடுத்துக் காப்பாத்துனீங்க? பாஸ் உங்களை நல்லாப் பார்த்துக்கச் சொன்னார். எங்க கூட கார்ல வாங்க'' என்கிறார்கள். கருணா மறுக்கவே வம்படியாக அழைத்துச் செல்கிறார்கள். ஐந்து நட்சத்திர ஹோட்டலில் விதவிதமாவ சாப்பாடு, புதிய ஆடைகள் என்று அன்றைய நாள் மாலை வரை மகிழ்ச்சியுடன் பொழுதைக் கழிக்கிறான் கருணா. நடுவில், 'நான் ரொம்பச் சந்தோஷமா இருக்கேன்' என்று தங்கள் பாஸிடம்



# ஷங்கரைக் கவர்ந்த 'நெஞ்சுக்கு நீதி'

செல்ஃபோனில் சொல்லும்படி உடனிருப்பவர்கள் மிரட்டுகிறார்கள். கருணாவும் சொல்கிறான்.

அன்றைய நாள் இரவு கருணா பிரம்மாண்டமான மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்படுகிறான். அங்கே ஒரு பெரியவர் பெட்டில் படுத்திருக்கிறார்.

''இவன்தான் அந்தப் பையனா, நாளைக்கு எந்தப் பிரச்னையும் வந்திடாதே'' என்று தனது இரண்டு மகன்களிடமும் கேட்கிறார். கருணாவுக்கு ஒன்றும் புரியவில்லை. சிறிது நேரத்துக்குப் பிறகுதான், தனது இருதயத்தை எடுத்துப் பெரியவருக்குப் பொருத்தப் போகிறார்கள் என்று புரிகிறது. கடந்த வாரம் இந்தப் பெரியவருக்கு இரத்தம் கொடுத்ததே தனக்கு வினையாக வந்து



விட்டதை உணர்கிறான் கருணா. அழுது புலம்புகிறான். என்னைக் கொன்று விடாதீர்கள், நான் வாழணும் என்று பெரியவர்களின் மகன்களிடம் புலம்புகிறான். மகன்களோ, கருணா தப்பித்து விடாதபடி கையைக் கட்டி, வாயைப் பொத்தி, மரணத்தைப் பார்த்துப் பயப்படக் கூடாது என்று அட்வைஸ் செய்கிறார்கள்.

இரவுப் பொழுதும் கடந்து சென்று கொண்டிருக்கிறது. திடீரெனப் பெரியவரின் பேரக் குழந்தைகள், அதாவது கருணாவிடம் காலையில் பொம்மை வாங்கிய குழந்தைகள் பெரியவரைப் பார்க்க வருகிறார்கள். பெரியவர் குழந்தைகளிடம் பேசிக்கொண்டே அவர்களின் கையிலிருக்கும் பொம்மையை வாங்கிப் பார்க்கிறார். ஆர்வத்தில் பெரியவர் பொம்மையின் ஏதோ ஒரு பகுதியை அழுத்த, விசை கிளம்பி சூடி பறக்கிறது. எதிர்பாராத இந்தச் சம்பவத்தால், பெரியவர் அதிர்ச்சியடைந்து மூச்சுத் திணறல் ஏற்பட்டு மரணமடைகிறார். கருணா தப்பித்துக் கொள்கிறான்.



குழந்தையும் தெய்வமும் ஒன்று. அநியாயமாக ஓர் ஏழையின் உயிரை எடுக்க நினைக்கும் பணக்காரரை, குழந்தையே தெய்வத்தின் வடிவத்தில் நின்று தண்டித்து விட்டதை இப்படம் உணர்த்துகிறது. கருணாகரனின் நடிப்பு, கதை சொல்லும் உத்தி போன்ற அம்சங்கள் முழுநீளப் படத்தைப் பார்த்த உணர்வை ஏற்படுத்துகின்றன.

**- ராகவ்குமார்**

வட வேங்கடம் தென் குமரி
ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்
— தொல்காப்பியப் பாயிரம்

*கோவையில், உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடக்கும் வேளையில் ஏற்கெனவே நடந்துமுடிந்த உலகத் தமிழ்மாநாடுகள் குறித்து இங்கே கொஞ்சம் மலரும் நினைவுகள்...*

# தமிழ் மாநாடு

**மொ**த்தத்தில் இந்தத் தமிழ் மாநாடு சாதித்துள்ள வெற்றிகள் என்ன?

ஆங்கில நாடுகளில் மிக நல்ல முறையில் வளர்ந்திருக்கிற திறனாய்வு முறைகளைக் கையாண்டு, நமது தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் அகில உலக அடிப்படையில் மேனாட்டார்களோடு சேர்ந்து நம்மூரில் ஆராய்ந்த செயலானது தமிழக வரலாற்றில் ஒரு பொன்னேடு! அதோடு, இலக்கியப் புலவர்களை மட்டுமே நினைத்துப் பொது மக்களை மறந்து விடாமல், ஏராளமான பொருட் செலவில் ஒரு பெரிய ஊர்வலத்தை ஏற்பாடு செய்து, அதில் எத்தகைய விபரீதமும் குழப்பமும் விளையாமல் நடத்தினார்களே அதை எத்தனை பாராட்டினாலும் தகும்! அது மட்டுமா? ஜனவரி மூன்றாந் தேதி மாலையில் ஐம்பது அறுபது நாகசுரங்களும்



அவற்றுக்கு இணையான தவுல்களும் ஒன்று சேர்ந்து, மனித இதயங்களுக்கு இல்லாத ஒற்றுமையோடு ஒன்றிணைந்து கடற்கரை மணலிலே ஒலித்தனவே, அது எத்தகைய அனுபவம்!

ஒரே ஒரு யோசனை: என்றாவது ஒருநாள் வெளிநாட்டுத் தமிழ் அறிஞர்களை எல்லாம் ஒவ்வொருவராக மேடை மீது அழைத்து, தங்களைத் தாங்களே அறிமுகம் செய்து கொள்ளும்படி ஏற்பாடு செய்திருக்கலாம். அதிலும் சில ஆங்கிலேயர்கள் திருத்தமான தமிழில் சிறப்பு 'ழ'கரத்தைக் குழைத்து இழைத்து மிழற்றுவதை நாமெல்லாம் மிகவும் சுவைத்திருப்போம். சந்தேகமில்லை. என்றாலும்,

இந்தக் குறையை ஓரளவு நிறைவு செய்தது வெளிநாட்டில் உள்ள சில தமிழர்களின் அறிமுக உரை! முக்கியமாக மலேஷியாவிலிருந்தும், இலங்கையிலிருந்தும் வந்திருந்த தமிழ்ப் பிரதிநிதிகள் உருக்கத்தோடு பேசிய பேச்சு மனத்தைக் கனிய வைத்தது.

தமிழில் புதிய சொற்கள் ஆக்கும் போதும், விஞ்ஞானச் சொற்களைச் செப்பனிடும் போதும், தமிழகமும் இலங்கையும் ஒன்று சேர்ந்து இணைப்பாகச் சொல்லாக்கப் பணியை மேற்கொண்டால், ஒரு வேலைக்கு இரு வேலையாக இராமல், ஒத்த பணியாக அது அமையும் என்பதை, இலங்கை அமைச்சர் திருச்செல்வம் அவர்களும், இலங்கை உயர்நீதி மன்ற நீதிபதி தம்பையா அவர்களும், க.பொ. இரத்தினம் அவர்களும் மற்றும் சிலரும் தெரிவித்தபோது, தமிழன்பர்கள் அனைவரும் உவகையோடு அதை வரவேற்றார்கள். இதுபோலவே, பீஜித் தீவுத் தமிழர்களின் சார்பில் ஸ்ரீமதி முருகேசன் அவர்களும், மலேஷிய மக்களின் சார்பில் ஸெனட்டர் திரு ஆதி. நாகப்பன் அவர்களும் பேசியபோது, கடல் கடந்த நாடுகளில் வாழும் தமிழர்களுக்குத் தாய்நாட்டின் மீது எத்தகைய பாசம் இருக்கிறது என்பதை நாமெல்லாம் மிக நன்றாக உணர முடிந்தது.

"சேய் நாட்டிலே இருக்கும் நாங்கள் அந்த நாட்டுக்குரிய குடிமக்களே என்றாலும், தாய்நாட்டுக்கு வந்து தாய்த் தமிழ்மாநாட்டிலே கலந்து கொண்டது எங்கள் வாழ்விலேயே பெரிய பேறாகும்!" என்றும்,

"தமிழர்களுக்குத் தமிழ் மொழியிலே உள்ள பற்று ஈடுஇணையற்றது. தாய்க்கு அடுத்தது தாய்மொழிதான் என்று கருதுகிறவர்கள் நாங்கள்! தமிழ்த்தாயின் மக்களிலே நாங்கள் தம்பிமார்கள்! அண்ணாவைத் தேடித் தாய்நாட்டுக்கு வந்தோம்!"

என்றும் சொன்னபோது, கூட்டத்தில் உண்டான கையொலி தேமதுரத் தமிழோசையாக எழுந்து திக்கெல்லாம் பரவியது!

- மீ.ப.சோமு, இரண்டாம் உலகத் தமிழ்மாநாடு (கல்கி 28.1.1968 இதழ் கட்டுரையிலிருந்து சில)

## சாதித்தது என்ன?



## செம்மொழி

அன்னைத் தமிழைக் காத்தருள்வாய்

— கவியரசு கண்ணதாசன் (தைப்பாவை)

**Story peep**

**எண்ணும்போதும் தமிழே எண்ணினீர்**
**இசைத்திடு தமிழே இசைப்பீர்**

— கவியோகி சுத்தானந்த பாரதி

ஜனவரி நான்காம் தேதியிலிருந்து, ஊர்வலம் நடைபெற்ற பத்தாம் தேதி வரை எத்தனை இலட்சம் மக்கள் சாரி சாரியாக வந்து மதுரையிலே சரிந்து கொண்டிருந்தார்கள்! விழாவை முன்னிட்டு மதுரை நகரின் பல பகுதிகளிலும் பொது முனைகளிலும் அன்றாடக் குளிப்பு முதலிய வசதிகளுக்கு ஏற்பாடு செய்து தந்ததை, அதன் முன்யோசனையை ஆரம்பத்தில் புரிந்து கொள்ள முடியாதவர்கள் பலர் உண்டு. ஆனால், ஆயிரம் ஆயிரமாகப் பொது மக்கள் கைப் பையிலே உணவுப் பொட்டலங்களுடனும், விரிப்பு, படுக்கைகளுடனும் மதுரையின் வீதிகளில் விடியற் காலையிலிருந்து நடந்து சென்றதைப் பார்த்தால், இவர்கள் எல்லாம் தங்களுக்கு வேண்டிய நித்தியத் தேவைப் பொருட்களுடன் ஆங்காங்கே தங்கிவிடும் நோக்கத்தோடு கிளம்பியிருக்கிறார்கள் என்பது புரிந்தது. நிகழ்ச்சிகளைப் பார்க்க வேண்டியது, சொற்பொழிவுகளைக் கேட்க வேண்டியது, பசிக்கும்போது சாப்பிட வேண்டியது, பொது வசதிகள் இருப்பதால், பயன்படுத்திக் கொண்டு அங்கங்கே தங்கிவிட வேண்டியது என்று திட்டம்! விடுதிகளையோ, உறவினர், நண்பர்களின் வீடுகளையோ நாடிச் செல்ல வேண்டிய அவசியமே இல்லை! இரவு நேரங்களில் மைதானங்களிலேயே ஆயிரக் கணக்கான மக்கள் கண் துயில்வதைக் கண்டபோது இந்த உண்மை மேலும் உறுதியாயிற்று!

உலகத் தமிழ் மாநாட்டின் ஒரு பெரிய சிறப்பு என்னவென்றால், லட்சக் கணக்கான தமிழ் மக்கள், முக்கியமாகத் தென் பகுதி மக்கள், மதுரை நகரிலே கூடி, ஒரு பெரிய திருவிழாவிலே கலந்து கொண்ட ஆனந்தத்தோடு கூடிப் பிரிந்தார்கள்! இத்தனை லட்சம்




மக்களும் ஒரே காலத்தில் இப்படி ஓர் ஆனந்தக் களிப்பிலே மூழ்கித் திளைப்பதற்காகவே இப்படி ஒரு திருவிழாவை நடத்தலாம்! இதைவிட வேறு பயனே இந்த ஜனநாயக யுகத்தில் வேண்டியதில்லை என்று பட்டது! ஆனால், உண்மையில் வேறு பல நிலையான பயன்களும் மதுரை மக்களுக்கும் மதுரை மாவட்ட மக்களுக்கும் இந்தத் திருவிழாவினால் ஏற்பட்டுள்ளன.

மாநாடு நடைபெறுகிற நாட்களில் பொதுமக்கள் எந்த வசதிக் குறையும் இல்லாமல் விழாவைக் கண்டு களிக்க

வேண்டும் என்ற திட்டத்துடன் இந்த ஏற்பாடுகளைச் செய்த தோடு, நிலையான சில வசதி களும் ஏராளமான பொருட் செலவிலே மதுரை மாநகரில் செய்யப்பட்டிருந்தன. மேலூர், இராமநாதபுரம், அருப்புக் கோட்டை, கன்னியாகுமரி, தேனி ஆகிய இணைப்புச் சாலைகளிலே அழகிய வாயில் வளைவுகள் நிலையான முறையில் நிறுவப்பட்டன. விழாவுக்குப் பிறகும் இவை நிலைத்து நின்று நான் மாடக் கூடல் நன்னகரை அணி செய்யும்! இவை தவிர, தமுக்கம் கலை யரங்கிலும், மூவேந்தர் நுழைவாயில் உலகத் தமிழ் மாநாட்டை நினைவூட்டிக் கொண்டு நிற்கிறது! தமிழ் நாடு சுற்றுலா வாரியம் மதுரையில் ஒரு மாபெரும் புதிய விடுதியைத்

# ...வந்த பொலிவு!



தொடங்கியிருக்கிறது. மாரியம்மன் தெப்பக்குளம் பயணிகளுக்கு வேண்டிய உல்லாசங்களோடு புதிய பொலிவு பெற்றிருக்கிறது. குடிசைப் பகுதிகள் எல்லாம் சீர்திருத்தம் செய்யப்பட்டு, மதுரையின் அழகைச் செப்பம் செய்து நிற்கின்றன. இந்த நிலையான பணிகள் தவிர, அறிஞர் பெரு மக்களின் சிலைகள் திறக்கப்பட்டு, தமிழ்ப் பண் பாட்டுச் சின்னங் களாகத் தமிழர் களின் பெருநகரான வரலாற்றுப் பின்னணி கொண்ட மதுரையிலே கொலுக் காட்சி தருகின்றன. கடல் கடந்த உலக நாடு களில் உள்ள முக்கிய நகரங் களிலே நாம் காணுகிற இத் தகைய காட்சிகள், இனி மதுரையிலும் நிலைபெற்று, உலகத் தமிழ் மாநாட்டின் விளைவாக உலக நகரங் களில் ஒன்றாக மாமதுரை காட்சி தரும்!

இத்தனை ஏற்பாடு களிலும் மிகவும் பாராட்ட வேண்டிய நிலையான வசதிகள், சாலைகளின் சீர மைப்பும், நடைப்பாதை பெருக்கமும், புதிய மின் இணைப்புக்களும் ஆகும்! இப்படி ஒரு மாநாடு நடக்கவில்லை என்றால், இந்தக் குடிசைகளின் சீர மைப்புக்கும், இத்தனை ஒளிமயமான மின் இணைப்புக்கும் எத் தனை யுகங்கள் பிடித்திருக் கும்! மதுரை மக்கள் இந்த அரிய வசதிகளுக்காகவே உலகத் தமிழ் மாநாட்டை வாழ்த்திக் கொண்டே இருக்க லாம்!

- மீ.ப.சோமு, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு (கல்கி 25.1.1981 இதழ் கட்டுரையிலிருந்து சில)

இமிழ் கடல் வேலித் தமிழகம் விளங்க

— பதிற்றுப்பத்து

மெக்ஸிகோ கடலில் (அமெரிக்காவின் லூசியானா அருகில்), பிரிட்டிஷ் பெட்ரோலியம் (BP), 5,000 அடி ஆழக்கடலில், எண்ணெய் கிணறு ஒன்றை டிரான்ஸ் ஓஷியன் (Transocean) என்ற கம்பெனியின் ரிக்(Rig)கைக் கொண்டு தோண்டிக்கொண்டிருந்தது.

அந்த ரிக், எண்ணெய் இருக்கும் இடம் வரை தோண்டிவிட்டது.



# கறுப்புத் தங்கத்தின் கறுப்பு தினம்!

ஜெ. முத்துக் குமார்

அவ்வளவு ஆழத்தில் இருக்கும் எண்ணெய், உயர் அழுத்தத்தில் இருக்கும் என்பதால், அதைக் கட்டுப்பாட்டுடன் முறையாகத் தரைக்குக் கொண்டுவர வேண்டும். அதற்கான ஆயத்தங்களைச் செய்து கொண்டிருக்கும்போது, திடீரென எண்ணெயும், வாயுவும் கலந்த கலவை, கட்டுங்கடங்காமல் ரிக்கின் தளத்தில் பீச்சி அடித்தது. யோசிப்பதற்குள், நெருப்புப் பிடித்து வெடித்து, ரிக்கே மெல்ல மெல்ல மூழ்க ஆரம்பித்தது. உடனடியாக அங்கு வேலை செய்து கொண்டிருந்த பலரையும் காப்பாற்றினாலும், பதினொரு பேர்களைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை. சிறிது நேரத்தில் அவ்வளவு பெரிய ரிக் மூழ்கிப்போய்விட்டது.






* டோனி ஹேவர்ட் (சி.இ.ஓ. பி.பி.)

கடந்த ஏப்ரல் மாதம் 20ம் தேதி, செவ்வாய்க்கிழமை, மறக்க முடியாத கறுப்பு தினமாக மாறிவிட்டது. எண்ணெய் மிகப் பெரிய அளவில் 5,000 அடி ஆழத்தில் உள்ள கடலின் அடிப்பரப்பிலிருந்து வெளிவர ஆரம்பித்தது. அதை அவ்வளவு எளிதாகக் கட்டுப்படுத்த முடியாது. பிரிட்டிஷ் பெட்ரோலியம் உடனடியாக வெவ்வேறு முயற்சிகளை மேற்கொண்டது. நிகழ்ச்சி நடந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகும், முயற்சிகள் தொடர்கின்றன. நிபுணர்களின் கருத்துகள் பலவாறு இருந்தாலும், ஒரு நாளைக்கு 10,000 முதல் 20,000 பேரல்கள் (தோராயமாக 16 முதல் 32 லட்சம் லிட்டர்கள்) வரை எண்ணெய் கசிந்து கொண்டிருக்கிறது என்று கருதப்படுகிறது. இதனால் என்ன என்று கேட்கிறீர்களா?

கடலின் ஆழத்தில் இருந்து வெளிவரும் எண்ணெய் (கடல் நீரை விடக் குறைந்த அடர்த்தி உள்ளதால்), கடலின் மேற்பரப்புக்கு வந்து, பரவத் தொடங்கியது. கணிப்புகளின்படி 10,000 சதுர கிலோமீட்டர் பரப்பளவிற்கு (அதற்கு மேலும் இருக்கலாம்) எண்ணெய் பரவுகிறது. இதனால் அமெரிக்காவில் பல மாநிலங்களின் கடற்கரைப் பிரதேசங்கள் பாதிக்கப்பட்டுள்ளன (லூசியானா, புளோரிடா போன்றவை உட்பட).

கணக்கற்ற கடல் வாழ் உயிரினங்கள் உயிரிழந்தன. கடல் பறவைகள் பாதிக்கப்பட்டன. மீன் பிடித் தொழிலே மீளாத் துயரில் ஆழ்ந்துவிட்டது. கடற்கரை

**கணக்கற்ற கடல் வாழ் உயிரினங்கள் உயிரிழந்தன. கடல் பறவைகள் பாதிக்கப்பட்டன. மீன் பிடித்தொழிலே மீளாத் துயரில் ஆழ்ந்துவிட்டது.**

# கசந்த காதல்

எண்ணைக் கசிவு சுற்றுச்சூழல் பாதிப்பை ஒரு பக்கம் ஏற்படுத்தினால், இன்னொரு பக்கம் பொருளாதாரப் பிரச்னையையும் ஏற்படுத்தியிருக்கிறது. உலகின் மிகப்பெரும் எண்ணைத் துரப்பண நிறுவனமான பிரிட்டிஷ் பெட்ரோலியம், பங்குகளை பல பென்ஷன் ஃபண்டுகள் வாங்கிக் குவித்திருக்கின்றன.

அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகளில், பணியாளர்கள் தங்கள் ஓய்வூதியப் பணத்தைப் பென்ஷன் ஃபண்டுகளில் முதலீடு செய்வார்கள்.

எல்லா ஃபண்டுகளுக்கும் பிரிட்டிஷ் பெட்ரோலியம் பங்கின் மேல் தீராக் காதல் உண்டு. இப்போது அதே காதல்தான் கசந்துபோயிருக்கிறது. மெக்ஸிகோ கடலில் ஏற்பட்டிருக்கும் எண்ணைக் கசிவைத் தீர்ப்பதற்காக, பிபி நிறுவனம் பெரும்முயற்சி எடுத்து வருவதால், இவ்வாண்டு அதன் பங்குதாரர்கள் யாருக்கும் ஈவுத் தொகை கொடுக்காமல் நிறுத்திவைத்துவிட்டது.

கடந்த இரண்டு மாதங்களுக்குள் பிபியின் பங்குகளின் விலையும் 40 சதவிகிதம் வரை விழுந்துவிட்டது. பிரிட்டிஷ் பெட்ரோலியம் மொத்த சொத்தையும் தொலைத்துவிடுமோ என்று பென்ஷன்தாரர்கள் அச்சப்படுகிறார்கள்.

மெக்ஸிகோ கடலில் எண்ணைக் கசிவு ஏற்பட்டிருப்பது, உலகமெங்கும் லேசான பயத்தை ஏற்படுத்தியிருக்கிறது. குறிப்பாக இந்தியாவில் கிருஷ்ணா கோதாவரிப் படுகையில் இயற்கை எரிவாயு எடுக்கும் நிறுவனங்களுக்கு இது ஓர் அபாய மணி.



சார்ந்த எந்த தொழிலும் நடைபெற முடியாது. சுற்றுலாத் தொழில் முற்றிலும் அழியும் நிலை. லட்சக்கணக்கான மக்களின் அடிப்படை வாழ்வாதாரம் உருக்குலைந்து விட்டது. வர்ணிக்க முடியாத சுற்றுச்சூழல் பாதிப்பு.

இந்த நிலையில், எண்ணெய் பரவுவதைத் தடுக்கவும், சுற்றுப்புறச் சூழல் பாதிப்புகளைக் குறைக்கவும் பிரிட்டிஷ் பெட்ரோலியம் கம்பெனிக்குப் பல நெருக்கடிகள். பிரிட்டிஷ் பெட்ரோலியம் இது வரை தோராயமாக 7,000 கோடி ரூபாய் வரை செலவழித்துள்ளது. எண்ணற்ற பேர்கள் தங்கள் பாதிப்புகளுக்கு நஷ்டஈடு கேட்டு கோர்ட்டுக்குப் போயிருக்கிறார்கள். இதைச் சமாளிக்க ஒபாமாவிடம் 90,000 கோடி ரூபாய் வரை நிதியை ஒதுக்கி வைக்க பிரிட்டிஷ் பெட்ரோலியம் ஒத்துக்கொண்டிருக்கிறது.

பிரிட்டிஷ் பெட்ரோலியம் இன்று வரை எண்ணெய் பரவுவதைத் தடுக்கவும், மாசு பட்டுவிட்ட சூழலை சரி செய்யவும் போராடிக் கொண்டிருக்கிறது. ஒபாமாவும், அவர் நியமித்துள்ள குழுவும், பிரிட்டிஷ் பெட்ரோலியத்துக்கு எச்சரிக்கை மேல் எச்சரிக்கையாக விடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் கம்பெனி இதைச் செய்யவில்லையென்றால், யார் விடுவார்கள்? இது என்ன இந்தியாவா? இது அமெரிக்கா பாஸ்!!!

மின்னல் கதை

# சலனம்

**பா.பனிமலர்**



**ம**ணிச் சத்தம் கேட்ட அமுதா, கேட்டைத் திறந்து சென்று பால் பாக்கெட் போடும் பைக்குள் கையை விட்டு எடுக்கும்போது, இரண்டு பாக்கெட் தட்டுப்பட்டது. உள்ளே வந்து கணவரிடம்,

''ஏங்க! இன்னைக்குத் தெரியாம ரெண்டு பால் பாக்கெட் போட்டுட்டாங்க!''

''பாவம், ஏதாவது புதுப்பையன் வந்திருப்பான் போல! சரி கொடு... நான் போய் திருப்பித் தந்துட்டு வர்றேன்!''

''ஒண்ணும் வேணாம்! நீங்க சும்மாயிருங்க, அவங்களுக்கு என்ன கணக்கா தெரியப் போகுது! இதை வெச்சு ஒண்ணும் கோட்டை கட்டப் போறதில்ல! இதைத் தயிருக்கு உறை ஊத்தப் போறேன்!''

மாடியிலிருந்து இறங்கி வந்த கீதா, ''ஸாரி மம்மி! நேத்து நீங்க ஊருக்குப் போயிட்டீங்க! நானும் சீக்கிரமே டியூசன் போயிட்டேன். அதனால, பால்பாக்கெட்டை எடுத்து பிரிட்ஜில் வைக்க மறந்துட்டேன்!'' என்றாள்.

அமுதா அதிர்ச்சியுடன் பால் கவரைப் பார்க்க, அதில் ஒரு பாக்கெட், முந்தைய நாள் தேதியுடன் இருந்தது. அமுதாவால் கணவரின் முகத்தைப் பார்க்க முடியவில்லை.

'தமிழில் கடவுள் வாழ்த்து இல்லாத நூலே கிடையாது' என்ற ஸ்ரீ பெரியவா வாக்கின் மூலமாகச் செம்மொழி மாநாட்டில் இறையுணர்வு இல்லாத ஆதங்கத்தை வெளிப்படுத்தியமைக்கு நன்றி!

-எஸ்.கார்த்திகேயன், சேலையூர்.

''செம்மொழி வரலாற்றில் சில செப்பேடுகள்'' எனும் முதல்வர் எழுதிய கடிதங்களிலிருந்து கொடுக்கப்பட்ட தொகுப்பு அருமையிலும் அருமை.

- பி.ராகவன், சென்னை-44.

எல்லாப் பத்திரிகைகளுக்கும் முன்னோடியாகச் செம்மொழி மாநாட்டுச் சிறப்பிதழை அளித்த கல்கிக்கு எமது பாராட்டு.

-கோதை ஜெயராமன், மீஞ்சூர்.

செம்மொழிப் பாடல் உருவாகக் காரணமான அனைத்துக் கலைஞர்களும், யாரும், சன்மானம் பெறாமல் பணிபுரிந்ததில் வியப்பில்லை. ஏனென்றால், 'அவர்கள் தமிழ்த் தாய்க்குத் தொண்டாற்றியுள்ளனர்.

- எம்.எஸ்.தியாகராஜன், சென்னை-61

அலாவுதீன் கையில் அற்புத விளக்கு இருந்தது போல, அவரிடம் கொடுக்கப்பட்ட பணியைச் சிறப்புறச் செய்கிறார் என்கிற செய்தி, படிக்கவே பரவசமாக இருக்கிறது.

- ஆர்.ராஜாமணி, சென்னை-81

கிரீடம் சூட்டிக் கோவணத்தை உருவலாமா? என்ற கேள்வியில் ஆயிரம் பொருள்கள் அடங்கியுள்ளன.

- கி.ரங்கசாமி, திருச்சி

பெரியவரின் அருள்வாக்கை முதல் பக்கத்தில் போட்டு செம்மொழி மாநாட்டுச் சிறப்பிதழை ஆரம்பித்தது அசத்தலோ அசத்தல்!




- மா.சண்முகம், கும்பகோணம்

செம்மொழி மாநாடு சிறப்பிதழ் நிறைகளை நிறைவுடன் சொல்லிவிட்டு, குறைகளைக் குற்றச்சாட்டாகக் கூறாமல் எதிர்கால

வட்டமேஜை

நினைவூட்டலாகக் கருத்துக்கள் இடம்பெற்றிருப்பது பாராட்டுக்குரியது.

-எஸ்.திருமலை, கோவை.

நடிகர் விக்ரம் பல வருடங்களாகத் தமிழ்த் திரையுலகில் நிலைத்திருக்கக் காரணம் அவர் தன்னைப் பற்றி நன்கு உணர்ந்து கொண்டதுதான்.

-எம்.இராஜேந்திரன், லால்குடி

'மு'கரப் பூங்காவின் மாதவி சிற்பங்கள், ஈ.வி.ஆர். சாலை பீச் ரிசார்ட்ஸ் வளாகம் செல்ல வேண்டிய ஆவலை ஏற்படுத்தி விட்டது!

- சாந்தி சுந்தர், நெய்வேலி

'பகுத்தறிவை வளர்த்த தெய்வத் தமிழ்' கட்டுரையும், 'தன்னை நன்றாய் தமிழ் செயுமாறே' என்ற கட்டுரையும் 'கல்கி' இதழுக்கு மெருகு.

-வே.அருணாதேவி, வடமாதிமங்கலம்

# அசத்தல்!

கலைஞரின் 'மெய்ப்பட்ட கனவு' கடிதம் மிகவும் நன்றாக இருந்தது.

- இராம.வேதநாயகம், வடமாதிமங்கலம்

தமிழ்ச் செம்மொழிப் பாடலில் ''யாதும் ஊரே, யாவரும் கேளிர்'' என்ற வரி, ''யாவரும் கேளீர்'' எனப் பாடகர்களால் உச்சரிக்கப்பட்டு, இசையமைக்கப் பட்டுள்ளதை, நீங்கள் 'கண்டுகொள்ளாமல்' விட்டு விட்டது, ஒரு சோகம்தான்.

- க.தெய்வசிகாமணி, திருவல்லிக்கேணி

# பரிசுக்கடிதம்!

**கிழக்குப் பதிப்பகம் வழங்கும் ரூ.250 மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்:**

ஆளுமை நிறைந்த படைப்பாளிகளின் படைப்பை திசைக்கொன்றாய் - மொழிக் கொன்றாய்க் கண்டு கேட்டு சுவைத்து, இரசித்து, அனைத்தையும் தமிழ் மண்ணில் வேர்விட்டுச் செழிக்கப் பதியனிடும் புதியதோர் முயற்சியில், இந்திய இலக்கிய இணைப்பில் ஈடுபட்டு வெற்றி ஈட்டிய சிவசங்கரிக்குப் பாராட்டுகள். என்ன செய்ய, தமிழில் பெயரை வைத்துவிட்டு குத்தாட்டம் - கோமாளிக் காட்சிகளும் வைத்துப் படமெடுத்திருந்தால் வரிவிலக்கும் - பாராட்டும் - பரிசும் கிட்டியிருக்கும். ஆனால், அவர் செய்துள்ளது தேசிய ஒருமைப்பாட்டின் இலக்கிய இணைப்பாச்சே... தமிழ் மொழி வளர்ச்சித்துறை செயல்படுகிறதா...? என்ன?!

- எல்.மாறன், வேலூர்

''இலங்கைத் தமிழர்களின் புனர் வாழ்வு சம்பந்தமான விஷயத்தில், தமிழக அரசு, மத்திய அரசுக்குப் போதுமான அளவு அழுத்தம் கொடுக்கவில்லை'' என்று தலையங்கம் குறிப்பிட்டிருப்பது முற்றிலும் சரியே.

-என்.பாலகிருஷ்ணன், மதுரை.

கிழக்கு பதிப்பகம் சமீபத்தில் வெளியிட்டிருக்கும் 'மதி கார்ட்டூன்ஸ்' புத்தகம் விலை ரூ.475; சலுகை விலை ரூ. 350/-

(இச் சலுகை ஜூலை 30, 2010 வரை மட்டுமே! கோபுலுவின் விமர்சனம் 65-ஆம் பக்கத்தில்...)

# அடுத்த வாரம் ஆரம்பம்...



என்ன பழக்கம் இது...
எப்பவும் உம்முன்னு முகத்தை
வெச்சிக்கிட்டு...
**கல்கி** (11.7.10) இதழிலிருந்து

## கரவை எழுந்தவுடன் சிரிப்பு!

நானும் சிரிச்சுக்கிட்டே எழுதறேன்...
உங்களையும்
சிரிக்க வைக்கத்தான் எழுதறேன்...
மறந்துடாதீங்க! பட்டுப் புடவை
பரிசுப் போட்டியும் இருக்கு...
என்னோட சேர்ந்து
அரட்டையடிக்க வாய்ப்பும் இருக்கு.
அடுத்த வாரத்திலிருந்து
கொண்டாட்டம் ஸ்டார்ட்!

உங்க
திருப்பு...

